THE LAST CENTURY'S HALL OF FAME
IS STUDDED WITH MANY A NAME

OF A GREAT ONE WHO DREAMED AND DID
AND WHO LIKE YOU WAS ONCE A KID...



MARTIN SHOWED
MIGHT ISN'T RIGHT

THOMAS INVENTED
THE ELECTRIC LIGHT

MOHANDAS SET HIS PEOPLE FREE

THE LUMIERE BOYS SHOT THE FIRST MOVIE

NELSON TOOK
HIS NATION FAR

HENRY MADE
A MOTOR CAR



CASSIUS PROVED
HE WAS THE BEST

EDMUND CLIMBED
MT. EVEREST





TERESA EASED THE
SICK MAN'S WOES

BILL GAVE THE
WORLD WINDOWS

I.T. Kids

GROWING UP WITH COMPUTERS

SO DECIDE NOW, WHAT ARE YOU GOING TO DO?
THIS NEXT CENTURY BELONGS TO YOU

TAKE THE FIRST STEP, STRONG AND SURELY
REMEMBER IT'S ALWAYS GOOD TO START EARLY!

**I.T.KIDS wishes all 4 to 14 year olds a very Happy New Year**

**I.T.KIDS centres in TAMIL NADU - Chennai :** • Anna Nagar, Ph: 6285959/6285599 • Adyar, Ph: 4415866/5867 • Abhiramapuram, Ph: 4995942 • Alwarthirunagar : Ph: 4841636 • Chrompet, Ph: 2347922 • Kilpauk, Ph: 6415516 • Kodambakkam, Ph: 4804606 • Kotturpuram, Ph: 4422448 • Nanganallur, Ph: 2347922 • Nungambakkam, Ph: 8234900 • Shenoy Nagar, Ph: 6282590/6260834 • SIET College Road, Ph: 4364119 • Thiruvanmiyur, Ph: 4419110 • T.Nagar, Ph: 8217043/8216074 • Vepery, Ph: 6416007/ 6416038 • **Coimbatore:** FIT, Ph: 213080 • KRV, Ph: 433368, 445926 • Precitron, Ph: 315859, 312425 • **Dindigul :** Ph: 432351 • **Erode :** Ph: 262317, 262325 • **Kotagiri :** Ph: 73894 • **Kumbakonam :** Ph: 426090, 421246 • **Nagercoil** : Ph: 60499 • **Ooty :** Ph: 47121 • **Salem :** Ph: 446744 • **Tirupur :** Ph: 743989, 747112• **Trichy :** Ph: 721582 • **Vellore :** Ph: 247913 **KERALA - Ernakulam:** Vinmat, Ph:318008 • Champion Academy, Ph: 371219, 367404 • Triponathura: Cyberkids, Ph: 780839 • **Trivandrum :** Aditya, Ph: 491339, 473994 • KCP, Ph: 337634 • **Trissur:** Kalliath, Ph: 331993 • **Alleppey:** Ph: 262362, 241921 **ANDHRA PRADESH Hyderabad : Malkajgiri :** Ph: 7056678 • **Srinagar Colony :** Ph: 3740647 • **Secunderabad :** Ph: 7897715 • **Vizag :** Ph: 595620 **KARNATAKA - Bangalore :** Basaveswaranagar, Ph: 3223616 • Cooke Town, Ph: 5462738 • Indira Nagar, Ph: 5274930• RT Nagar, Ph: 3338145, 3338146.

# அம்புலிமாமா

மார்ச் 2000



## பொருளடக்கம்

மதிமுகம் : 102 புன்னகை : 7




Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, Chandamama Buildings, Vadapalani, Chennai - 600 026. Editor : Viswam


### சிறப்புப் படைப்பாக

மூன்று விசித்திர வரங்கள்





வேதாளம் சொல்லும் கதை



பங்கு பெறுங்கள் பரிசு பெறுங்கள்



அம்புலிமாமா



## Statement about Ownership of AMBULIMAMA (Tamil)

Rule 8 (form VI), Newspaper(Central) Rules, 1956

| | |
|---|---|
| 1. Place of Publication | CHANDAMAMA BUILDINGS<br>NSK Salai<br>Chennai-26 |
| 2. Periodicity of Publication | MONTHLY<br>1st of each Calender month |
| 3. Printer's Name<br>Nationality<br>Address | B.VISWANATHA REDDI<br>INDIAN<br>Chandamama Buildings<br>Chennai-26. |
| 4. Publisher's Name<br>Nationality<br>Address | B.VISWANATHA REDDI<br>INDIAN<br>Chandamama Buildings<br>Chennai-26 |
| 5. Editor's Name<br>Nationality<br>Address | B.VISWANATHA REDDI<br>INDIAN<br>Chandamama Buildings<br>Chennai-26 |
| 6. Name and Address of individuals who own the paper | Chandamama India Ltd.,<br>Board of Directors:<br>1. Vinod Sethi<br>2. B. Viswanatha Reddi<br>3. P. Sudhir Rao |

*I, **B. Viswanatha Reddi,** hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.*

1st March 2000

**B. VISWANATHA REDDI**

*Signature of the Publisher*



நிறுவனர் :

பி. நாகிரெட்டி சக்ரபாணி

# தகுதி பெற்றவருக்கே வாக்கு!

இந்த இதழ் வெளியாகும் போது நம் நாட்டின் பல மாநிலங்களில் தேர்தல் அமளியில் மூழ்கியுள்ள சூழ்நிலையைக் காண்கிறோம்.

ஆனால் தேர்தல் கால அமளி நிலையல்ல. இதில் நிதானமாக முடிவு எடுக்கும் பொறுப்பு மக்களுக்கு உள்ளது. வாக்களிக்க வயது பதினெட்டு எனக் குறைக்கப்பட்டிருப்பதால் நம் வாசகர்களில் பலர் வாக்குரிமை பெற்றிருப்பார்கள். மத, இன, அரசியல் பாகுபாடில்லாமல் இவர்கள் தகுதி பெற்ற வேட்பாளர்களுக்கே தம் வாக்குகளை அளிக்க வேண்டுமெனப் பல அறிஞர்கள் அறிவுரை கூறிவருகிறார்கள். இது சரியான அறிவுரையே. ஆனால் பிரச்சினை என்னவென்றால் நல்மனம் படைத்த பலர் வாக்களிக்கச் செல்வதில்லை. ஏனெனில் இச்சமயங்களில் அவர்கள் பலவிதமாய் நெருக்கப் படுகிறார்கள்.

தேர்தலின் போது தகுதிபெற்றவர்களை நிறுத்த அப்போதைய சூழ்நிலையை மிகவும் அமைதியுள்ளதாகச் செய்ய வேண்டும். வேட்பாளர்கள் வாக்காளரை அணுகி வாக்குக் கேட்கும் நிலையை மாற்றி வாக்காளர் தகுதி பெற்றவரை வேட்பாளராக நிறுத்த அவரிடம் சென்று வேண்டிக்கொள்ளும் நிலை உருவாக வேண்டும்.

இது சமுதாயத்தில் ஏற்பட வேண்டிய மற்றொரு புரட்சி இதனை அடையவே நாம் முயலவேண்டும்.

# செய்திச் சுடர்

## சட்டைப் பையில் பூதம்!

சட்டைப்பைக்குள் ஒரு சிகரெட் பேக்கை வைத்திருப்பவர் உண்மையில் தம்மோடு ஒரு பூதத்தையே வைத்துக்கொண்டிருக்கிறார். ஏனெனில் சிகரெட் ஒருவரது ஆயுளை உறிஞ்சிக் கொண்டே வருகிறது. ஒரு சிகரெட்டைக் குடித்தால் அது ஒரு மனிதனின் வாழ்வில் 11 நிமிடங்களைக் குறைத்து



விடுகிறது. 20 சிகரெட்கள் கொண்ட ஒரு பேக் 3 மணி 40 நிமிடத்தை ஒருவனின் வாழ்வில் குறைக்கிறது.

நவம்பர் 1999ல் நடத்திய ஒரு ஆய்வின்படி 12 கோடி பேர்கள் சிகரெட் குடிப்பவர்கள் என்றும் இவர்களின் 40 லட்சம் பேர்கள் புகையிலையால் வரும் நோய்களால் பாதிக்கப்பட்டு இறந்தவர்கள் என்றும் தெரிய வருகிறது.

## நீண்டகாலம் வாழ நன்கு சிரியுங்கள்.

புகை பிடிப்பதால் உயிர் போகிறது. ஆனால் சிரித்துக் கொண்டே இருந்தால் உங்கள் ஆயுள் அதிகரிக்கிறது. இது பொதுவாக யாவராலும் நம்பப்படு



கிறது. எதுவானாலும் சரி, சிரிப்பு வாழ்க்கையை இன்பகரமாக்குகிறது. ஜனவரி 9ல் உலகிலுள்ள சுமார் 500 சிரிப்போர் அமைப்புகள் உலகச் சிரிப்பு நாளைக் கொண்டாடின.

## உலகமே வீடு!

ஒரு சிலருக்குத் தாம் வசிக்கும் கட்டடமே வீடு, வேறு சிலரோ தம் நாட்டை யே தம் வீடாகக் கருதுகிறார்கள். ஆனால் வேறு சிலரோ இந்த உலகில் எல்லோரும் ஒரே குடும்பமாக வாழ்வ தாகவும் நினைக்கிறார்கள். சூரிய குடும்பமே தம் வீடாக ஒரு சிலர் கருதுகிறார்கள்.



ஆனால் இப்போது பிரிட்டிஷ் வானாராய்ச்சி வல்லுநர்கள் ஒரு வெளிச்சம் சூரிய குடும்ப வட்டத்திற்கு வெளியே இருந்து வந்து கொண்டிருப்பதாகக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அதாவது நம் வாழ்க்கையை ஒரு அலாதியான சக்தி இயக்கி வருகிறது என்பது நமக்குப் புலனாகிறது.

உண்மையைத் தேடிய செம்மல்

# இம்மாதம் பிறந்தவர்
# தாரா ஷிகோஹ்

முகலாய மாமன்னர் ஷாஜஹானுக்கும் ராணி பேகம் மும்தாஜிற்கும் ஒரு ஆண் குழந்தை முதலில் பிறந்தது மகிழ்ச்சிகரமான நிகழ்ச்சியே. கி.பி 1615 மார்ச் 20ல் இதற்காக மன்னரின் அரண்மனையே விழாக்கோலம் பூண்டது.

தாரா எனப் பெயரிடப்பட்ட அக் குழந்தை நன்கு வளர்ந்து இளைஞனானான். அவன் யாவரிடமும் இரக்கம் கொள்பவன். மரியாதையுடன் நடப்பவன். அவன் தன் நேரத்தின் பெரும்பகுதியை இந்திய மாபெரும் படைப்புகளான வேதங்களையும் உபநிஷத்துக்களையும் ஆழ்ந்து படிப்பதில் செலவிட்டு வந்தான். வேதாந்த, ஆன்மீக விஷயங்கள் பற்றி விவாதிக்க அவன் பண்டிதர்களையும் மேதைகளையும் தன் அரண்மனைக்கு வரவழைத்து அவர்களுடன் வாத விவாதமும் புரிந்து வந்தான்.



அவன் பகவத்கீதையையும் சில உபநிஷத்துக்களையும் பாரசீக மொழியில் மொழி பெயர்த்தான். ஹிந்து மதக் கோட்பாட்டிற்கும் இஸ்லாமியக் கோட்பாட்டிற்குமிடையே ஆன்மீக விஷயத்தில் பெரிய வித்தியாசம் எதுவும் இல்லை என்று அவன் கண்டு கொண்டான். இந்த இருமதங்களிலுள்ள ஒற்றுமையை எடுத்துக் காட்ட அவன் 'சமுத்திர சங்கமம்' என்ற நூலை எழுதினான்.

தாரா இவ்வாறு உயரிய நோக்கங்களோடு ஈடுபட்டிருக்கையில் அவனது தம்பியான ஔரங்கஜேப் அவனுக்கு எதிராகச் சதிபுரியலானான். அவனது தந்தை ஷாஜஹான் நோய் வாய்ப் பட்டது அவனுக்கு ஒரு அரிய வாய்ப்பை அளித்தது. தாரா ஒரு போரில் தோற்கடிக்கப்பட்டான். தாதரின் ஆளுனரான ஜீவன்கான் என்பவனிடம் தாரா அடைக்கலம் புகுந்தான். ஒருமுறை தாரா இந்த கானை மரணத்திலிருந்து காப்பாற்றி இருந்தான். அதனை எண்ணிக் கூடப் பாராமல் நம்பிக்கை துரோகம் செய்து ஜீவன்கான் தாராவை ஔரங்கஜேப்பிடம் ஒப்படைத்து விட்டான். ஔரங்கஜேப் அரியாசனத்திற்கு முதல் உரிமை பெற்ற தாராவைக் கொடூரமாக நடத்தி, டில்லி நகர வீதிகளில் யாவரும் பார்க்க ஊர்வலமாகக் கொண்டு சென்று அவனை கி.பி.1659 ஆகஸ்ட் 30ல் கொன்று விட்டான். தாராவின் மகன் சுலைமானும் சிறையில் அடைக்கப்பட்டு 1662ல் கொல்லப்பட்டான். ஔரங்கஜேப் தன் மற்ற இரு சகோதரர்களான முராதையும் ஷுஜாவையும் கொன்று விட்டு அரியாசனத்தைக் கைப்பற்றினான்.

# அம்புலிமாமா

## மார்ச் 2000



**விடைகள் :**

1. மேவார் (உதயபூர்) ராணி பத்மினி.
   ராணாரத்தன்சிங் : படை எடுத்து வந்த எதிரி அல்லாவுத்தீன் கில்ஜி. கி.பி 1302ல் நடந்தது.
2. ஏ) பெரியம்மா, சிற்றன்னை குழந்தைகள்.
   பி) ஜராசந்தன் கம்சனின் மாமன்.
   சி) மாற்றாந்தாய் சகோதரர்கள்.
   டி) கிருபாசாரியார் அசுவத்தாமனின் தாய்மாமன்.
   இ) மாற்றாந்தாய் சகோதரர்கள்.
3. 1) பஞ்சதந்திரம்: விஷ்ணுசர்மா.
   2) குணாட்டியரின் பிருஹத்கதா, இதிலிருந்துதான் சோமதேவர் கதாசரித சாகரம் என்ற நூலை எழுதினார்.
   3) புத்தரின் ஜாதகக்கதைகள்.
   4) பகவத் கீதை.
   5) வேதங்கள, உபநிஷத்துக்கள், இதிகாசங்கள் (இராமாயணம், மகாபாரதம்) புராணங்கள்.

# ஆக்கபூர்வமான போட்டிகள்

## அம்புலிமாமா வாசகர்களுக்கு

உங்கள் அறிவுத்திறனைக் காட்ட பல்வேறு போட்டிகளில் கலந்து கொள்ளுங்கள்.





**போட்டோ வாக்கியப்போட்டி**

1. ஒன்றுக்கொன்று ஏதாவது வகையில் தொடர்புள்ள இரு போட்டோக்களை இளம்போட்டோகாரர்கள், அத்தொடர்பு பற்றிய விளக்கத்துடன் எமக்கு அனுப்பலாம். தேர்ந்தெடுக்கப்படும் (இரு) போட்டோக்களுக்கு பரிசு **ரூ.500/-**
2. ஒரு பழமொழியைப் பிரசுரிக்கிறோம்.



அதை விளக்கும் நிகழ்ச்சியையோ, உங்கள் சொந்த அனுபவத்தையோ அல்லது புதிய பழைய கதைகளையோ 300 சொற்களுக்கு மேற்படாமல் எழுதி அனுப்புங்கள்.

இம்மாதப் பழமொழி:

**'தூரத்து பச்சை கண்ணுக்கு குளிர்ச்சி'**

தேர்ந்தெடுக்கப்பட்ட படைப்பிற்குப் பரிசு ரூ.500/-

உங்கள் படைப்பு மார்ச் 31க்குள் எமக்குச் சேர வேண்டும். பரிசு பெற்ற படைப்பு மே மாத இதழில் பிரசுரிக்கப்படும்.

உங்கள் படைப்புகளை அனுப்ப வேண்டிய முகவரி : **அம்புலிமாமா ஆக்க பூர்வமான போட்டிகள்,** சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை - 600 026.

- ஆசிரியர்





## திறமைசாலி வேண்டாம்!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி விடாப்பிடியாக ஒரு வேலையைச் செய்ய முனைந்திருப்பதைப் பார்த்தால் அதனால் உனக்குப் பெருத்த லாபம் கிடைக்கும் என்று தெரிகிறது. சில சமயங்களில் ஒரு சிலர் தமக்குக் கிடைக்கும் நல்ல வாய்ப்பை பயன்படுத்திக் கொள்ளாமல் போய்விடுவதும் உண்டு.




நீயும் அப்படி செய்துவிடக்கூடாது என்பதற்காக உனக்கு ஞானசேகரன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

ஞானபுரத்தில் ஞானசேகரர் என்ற பண்டிதர் இருந்தார். அவர் பல காவியங்களைப் படைத்தார். அவற்றைப் படித்துப் பார்த்தவர்களெல்லாம் அவை போன்ற உயர் காவியங்கள் தம் வாழ்நாளில் படித்ததே இல்லை என்று கூறிப் பாராட்டினார்கள். ஆனால் ஞானசேகரனின் பெருமையை ஞானபுரத்தவர்கள் அறிந்திருக்கவில்லை.

தன்னைப்பற்றியாரும் அறியாவிட்டாலும் தன் படைப்புகளால் சமுதாயம் நல்ல பயனை அடைய வேண்டுமென்றே அவர் எண்ணி வந்தார்.

இச்சமயத்தில் அந்நாட்டு மன்னன் பிரதாபவர்மன் தண்டோராப் போட்டு ஒரு அறிவிப்பு செய்தான். அவனே ஒரு கவிஞன். ஆயினும் மற்றும் சில கவிஞர்களுடன் சேர்ந்து அவன் காவியம் எழுத விரும்பினான். அதற்கு கவிஞர்கள் தேவை என்பது தான் அந்த அறிவிப்பு. அதைக் கேட்டு ஞானசேகரரின் நண்பன் ஓடோடி வந்து அவரிடம் ''இது பொன்னான வாய்ப்பு. ஒரு கவிஞனுக்கு அரசாங்க மரியாதையும் சன்மானமும் கிடைக்குமானால் அதைவிட வேறு என்ன வேண்டும்? உடனே நீங்கள் தலைநகருக்குப் போய் மன்னனைப் பாருங்கள்'' என்று கூறி அவருக்கு உற்சாகமூட்டி அவரைத் தலைநகருக்கு அனுப்பி வைத்தான்.

தலைநகரை அடைந்த ஞானசேகரர் எவ்வித சிரமமும் இல்லாமல் மன்னனைக் கண்டார். அவர் தாம் எழுதிய சில காவியங்களை மன்னனிடம் கொடுத்தார். அவனும் அவற்றை வாங்கிக் கொண்டு தன் இலக்கியப் படைப்புகள் சிலவற்றைப் பண்டிதரிடம் கொடுத்து ''ஐயா! தாங்கள் இவற்றைப் படித்துவிட்டுத் தங்கள் அபிப்பிராயத்தைக் கூறுங்கள். நானும் உங்கள் காவியங்களைப் படித்துவிட்டு என் கருத்தையும் தெரிவிக்கிறேன். ஒரு வாரத்திற்குப் பின் நாம் சந்திக்கலாம். அதுவரை நீங்கள் எம் விருந்தினர் விடுதியில் தங்கி இருங்கள்'' என்று கூறி

அனுப்பினான்.

ஞானசேகரரும் விருந்தினர் விடுதிக்குச் சென்று தமக்கு ஒதுக்கப்பட்ட அறையில் தங்கி மன்னன் கொடுத்த இலக்கியப் படைப்புகளைப் படித்துப் பார்த்தார். இதற்கு ஒரு நாள் தான் பிடித்தது அதனால் மற்ற ஆறு நாட்களையும் அதே விடுதியில் தங்கி இருந்த கவிஞர்களிடம் பேசிக் கழிக்கலானார். அவர்களும் மன்னனுக்கு காவியம் எழுதுவதில் உதவி செய்ய வந்த கவிஞர்களே.

அந்தக் கவிஞர்கள் அவ்வளவாகத் திறன் பெற்றவர்களல்ல என்பது அவருக்கு விளங்கி விட்டது. ஆயினும் அவர் ''கவிஞர்களே! உங்கள் அறிவும் எண்ணங்களும் வியக்கத்தக்கவையே. ஆனால் உங்களுக்கு மொழி மீது ஆதிக்கம் செலுத்த முடியாது போகிறது. தர்க்க ரீதியாக விஷயத்தைக் கூறும் திறனும் இல்லை. அதனால் இன்னமும் கொஞ்சகாலம் நீங்கள் குருகுலவாசம் செய்வது நல்லது'' என்று கூறினார்.

அதைக் கேட்ட அக்கவிஞர்கள் சிரித்தவாறே '' நீங்கள் கூறியவை எல்லாம் எங்கள் குருவிடம் உள்ளன. ஆனால் அவர் இங்கு வர முடியாது. அவர் தாம் எங்களை இங்கே அனுப்பி வைத்தார்'' என்றார்கள். அது கேட்டு ஞானசேகரர் ஆச்சரியப்பட்டு ''நம் மன்னர் ஒரு மாபெரும் காவியத்தை எழுத எண்ணி இருக்கிறார். இதற்கு உதவ உங்கள் குரு வந்தால் எவ்வளவோ நன்றாக இருக்குமே'' என்றார்.



அப்போது அவர்கள் ஒரே குரலில் ''ஓகோ! அப்படியானால் உங்களுக்கு மன்னரைப் பற்றிச் சரியாகத் தெரியாது போலிருக்கிறது'' என்றார்கள். ஞானசேகரரும் ''அப்படி ஏதாவது சிறப்பானது உள்ளதா?'' எனக் கேட்க அவர்களில் ஒருவர் ''சொல்கிறேன் கேட்டுக் கொள்ளுங்கள்'' என்று கூறிப் பின் வருமாறு சொல்லலானார்.

''பிரதாபவர்மன் எதிலும் முழுமையாகத் தேர்ச்சி பெற்றவனல்ல. ஆனால் அவன் எல்லாக் கலைகளையும் கற்க வேண்டும் என்று ஆசைப்படுபவன். அவன் அரசகுமாரனாக இருந்ததால் இந்நாட்டின் மன்னனாகி விட்டான். ஆனால் ஒரு வீரனாகவோ, கவிஞனாகவோ, ஓவியனாகவோ



அல்லது இசைவாணனாகவோ ஆக முடியவில்லை ஏனெனில் இது பரம்பரைச் சொத்து அல்ல.

சிறு வயதிலிருந்தே எல்லாவற்றையும் கற்றுக் கொண்டு விடவேண்டும் என்று பிரதாபவர்மன் ஆர்வம் கொண்டிருந்தான். அதனால் எல்லாக்கலைகளிலும் கொஞ்சம் கொஞ்சம் பயிற்சி அடைந்தான். அவன் அரசனாதலால் அவனைச்சுற்றி இருப்பவர்கள் அனைவரும் எல்லாக் கலைகளிலும் அவன் தேர்ந்தவன் என்று புகழ்ந்து கொண்டே இருந்தார்கள். அவனும் அது உண்மை என்று நம்பி வந்தான். ஆனால் நாளாவட்டத்தில் ஒவ்வொரு துறையிலும் திறமை மிக்கவர்களை சந்தித்ததால் தான் எல்லாத்துறைகளிலும் எவ்வளவுக்குப் பின்னடைந்திருக்கிறான் என்பதை அவன் தெரிந்து கொண்டான். அதனால் அவன் மனம் வெகுவாகக் கவலைப் படலாயிற்று.

அவனது அமைச்சர் அவனது கவலை என்ன என்பதை ஊகித்து விட்டார். அதனால் அவனிடம் ''அரசே! தாங்கள் தங்களை விடத் திறன்படைத்தவர்களைக் காணச் சகியாது இருக்கிறீர்கள். அதனால் தான் எப்போதும் கவலையுடன் இருக்கிறீர்கள். இதற்கு ஒரே வழி திறமைசாலிகளுக்குப் பதவிகள் கொடுக்காமலும் உங்களருகே வர விடாமலும் பார்த்துக் கொள்வது தான். தங்களைவிடக் குறைந்த திறன் படைத்தவர்களையே தங்களைச் சுற்றி இருக்க அமர்த்திக் கொள்ளுங்கள். உண்மையிலேயே திறன் படைத்தவர்களை ஓரிடத்தில் ஒன்று சேர்த்து வாழ வசதி செய்து கொடுங்கள். மிகவும் தேவை என்ற நிலையில் அவர்களிடம் யோசனை கேளுங்கள். அதன்படி நடந்து உரிய பயனையும் பெறுங்கள்'' என்று கூறினார்.

பிரதாப வர்மனும் உடனே திறமைசாலிகளுக்கென ஒரு தனி இல்லம் அமைத்துவிட்டான். அதில் அறிவாளிகளும் திறமைசாலிகளும் வைக்கப் பட்டனர். அந்த இல்லத்திற்கு முதலில் அனுப்பபட்டவர் மன்னனுக்கு இந்த யோசனையைக் கூறிய அமைச்சரே, அதன்பின் மன்னன் தனக்கு 'ஆமாம்' போடும் ஒருவனை அமைச்சனாக்கிக் கொண்டான். அது போலவே அனுபவமிக்க தன் சேனாதிபதியைத் திறமைசாலிகள்

இல்லத்திற்கு அனுப்பிவிட்டு தன் சொல்லைக் கேட்கும் ஒரு வீரனை சேனாதிபதியாக்கிக் கொண்டான். இதுபோல ஆஸ்தானக் கவிஞர்கள், கலைஞர்கள் ஆகியோரும் திறமை சாலிகள் இல்லத்திற்கு அனுப்பப் பட்டு அவர்களுக்குப் பதிலாக திறமையற்றவர்கள் நியமிக்கப்பட் டார்கள். இவ்வாறு மன்னனைச் சுற்றி இருந்தவர்கள் மன்னனைவிடக் குறைவான திறமைசாலிகளே என்றாகியது.

திறமைசாலிகள் இல்லத்தில் இருந்தவர்களுக்கு எவ்விதக் குறையும் இருக்கவில்லை. அவர் களது சம்பளம் மானியம் எல்லாம் ஒழுங்காக அவர்களுக்கு கிடைத்து வந்தன. மன்னன் அவர்களிடம் யோசனைகள் கேட்கும் போது அவற்றைச் சொல்ல வேண்டியது தான் அவர்களது வேலை. ஆனால் அதற்கான தனி மதிப்போ கௌரவமோ கிடையாது. இந்தத் திறமை சாலிகள் இருப்பதால் மக்களுக்கு எவ்விதப் பயனும் இல்லை என்று எல்லோரும் எண்ணவும் கூறவும் தொடங்கி விட்டார்கள். இவ்வாறு திறமைக்கு மதிப்பே இல்லாது போயிற்று''.

இவ்வாறு அந்தக் கவிஞன் கூறியதைக் கேட்டுக் கொண்டு ஞானசேகரர் திறமைசாலிகள் இல்லத்திற்குச் சென்றார். அங்குள்ள திறமைசாலிகளைச் சந்தித்தார். அவர்களுக்குள்ள திறமையைக் கண்டு வியந்தார்.

ஞானசேகரர் தம் விடுதிக்குத் திரும்பி வந்தார். மன்னன் கூறிய ஒரு வார காலம் முடிந்ததும் அவர் மன்னனைக் கண்டார். அப்போது பிரதாபவர்மன் அவரிடம் ''மகாகவியே! என் காவியம் எப்படி இருந்தது?'' என்று கேட்டான். அவரும் ''அரசே! உங்களுக்கு மொழி மீது மிகுந்த பற்றுதல் உள்ளது. ஆனால் உங்களது கருத்துக்கள் உயர்ந்தனவாக





இல்லை. அவற்றில் புதுமை எதையும் காண முடியவில்லை'' என்றார்.

மன்னனும் ''நான் உங்கள் படைப் புகளைப் படித்தேன். தங்களது திறமை உயர்ந்தது. அதனால் எம் திறமைசாலிகள் இல்லத்தில் தங்களுக்கு இடம் அளிக்கலாமென எண்ணிக் கொண்டிருக்கிறேன்'' என்றான். ஞானசேகரருக்கு சற்று முன்புதான் தன்னோடு விடுதியில் இருந்த கவிஞர்களை மன்னன் தனக்கு உதவத் தேர்ந்தெடுத்து விட்டான் என்பது தெரிந்தது. அதனால் அவர் ''அரசே! நான் தங்களோடு சேர்ந்து காவியம் எழுதவே வந்தேன். திறமைசாலிகள் இல்லத்தில் இருக்க வேண்டுமென்ற எண்ணத்தோடு இங்கு வரவில்லை. எனவே எனக்கு விடை கொடுங்கள்'' எனக் கூறினார். பிரதாபவர்மனும் அவருக்கு விலையுயர்ந்த ரத்தினமாலை ஒன்றைப் பரிசாக அளித்து அனுப்பி வைத்தான்.

வேதாளம் இந்தக் கதையைக் கூறி ''ஞானசேகரர் தனக்குக் கிட்டிய நல்ல வாய்ப்பை நழுவ விட்டதை என்ன என்று கூறுவது? அவரோ மகா கவி என்று பெயர் பெற்றுவிடவில்லை. திறமைசாலிகள் இல்லத்தில் சேர்ந்திருந்தால் உயரியவர்களின் நட்பு கிடைத்திருக்கும். அதையும் வேண்டாமெனக் கூறிவிட்டார். இது அறிவற்ற செயல்தானே? இச் சந்தேகங்களுக்குச் சரியான பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

அது கேட்டு விக்கிரமனும் ''மன்னன் பிரதாபவர்மனைப் பற்றிய முழு விவரங்கள் தெரியாத நிலையில் தான் ஞானசேகரர் அவனைக் காணத் தலைநகருக்குச் சென்றார். மன்னனோடு சேர்ந்து காவியம் எழுத வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு இருந்திருந்தால் அவர் மன்னனின் படைப்புகள் பற்றி அவனிடமே கடுமையாக விமர்சனம் செய்திருக் கமாட்டார். மேலும் பிரதாபவர்மன் தன்னைவிடக் குறைந்த திறனுள்ள கவிஞர்களைத் தேர்ந்தெடுத்து விட்டான் என்பதை அவர் அறிந்து கொண்டிருந்தார். இதனால் மன்னனது உண்மையான நோக்கம் என்ன என்பது நன்கு வெளிப்பட்டு விட்டது. இதனால் ஞானசேகரருக்குத்



*''தொல்லுலகில் நல்லார் ஒருவர் உளரேல்*
*அவர் பொருட்டு எல்லார்க்கும் பெய்யும் மழை''*

*- ஔவையார்*

தலைநகரில் அரசனோடு இருக்க விருப்ப மில்லை. திறமைசாலிகள் இல்லத்தில் இருப்பவர்களெல்லாம் மிக்கத் திறன் கொண்டவர்கள். அவர்களை மன்னன் அந்த இல்லத் திற்கு அனுப்பினான் என்றால் அவனுக்குத் திறமைசாலிகளைக் கண்டு கொள்ளும் சக்தி உள்ளது என்று நன்கு தெரிகிறது. அவனுக்குப் பொறாமையும் இல்லை. ஞான சேகரரின் படைப்புகளை அவன் பாராட்டினான். அவருக்கு ரத்தின மாலையை பரிசாகவும் அளித்தான். அவரும் திறன்மிக்கவரே என்று எண்ணித்தான் அவரை திறமை சாலிகள் இல்லத்தில் இருக்கச் செய்ய நினைத்தான். உண்மையான திறமை சாலி தனக்கு மரியாதையும் கௌரவமும் வேண்டுமென்று கோருவது இல்லை.

அந்த இல்லத்தில் உள்ளவர்கள் தம் திறமை முதலில் மன்னனுக்கும் அடுத்து மக்களுக்கும் பயன்பட வேண்டுமென எண்ணுபவர்கள். ஆனால் ஞானசேகரர் தம் கவிதைகள் நேரடியாக மக்களிடம் போய்ச் சேர வேண்டுமென விரும்புபவர். அதனால்தான் மன்னனின் ஆதரவை உதறித் தள்ளிவிட்டு வந்தார். இது அறிவற்ற செயலல்ல. புத்திசாலித் தனமான செயல்'' என்று கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முறுங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# தவறு எங்கே?

சிவசங்கரனூரின் சிவன் கோவிலுக்கு யாரோ ஒருவர் ஒரு காளையை காணிக்கையாகக் கொடுத்தார். அது முரட்டுக்காளை. அதனருகே யாராவது சென்றால் அது பயங்கரமாக மூச்சுவிட்டு முட்டவரும்.

அவ்வூர் ஜமீன்தாரரின் மகன் சிவசங்கரன். ஒருநாள் தன் வயது சிறுவர்களுடன் சேர்ந்து விளையாட சிவன் கோவிலருகேயுள்ள ஆற்றங்கரையை நோக்கிச் சென்றான். அவன் ஆற்றங்கரையை அடைந்த சற்று நேரத்திற்குப் பிறகு அவனது நண்பர்கள் ஒவ்வொரு வராக அங்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் கோவில் காளையைப் பற்றிக் கூறி ''அது பொல்லாதது. அதன் அட்டகாசத்தை யாராலும் சகிக்க முடியவில்லை. எனவே நீ அதன் பக்கம் போகாதே'' எனக்கூறி சிவசங்கரனை எச்சரித் தார்கள்.

ஆனால் சிவசங்கரன் அதைச் சட்டை செய்யவில்லை. தான் ஜமீன்தாரின் மகனாதலால் தனக்குத் தனி அந்தஸ்து இருப்பதாக அவன் நினைத்துக் கொண்டான். தான் ஏழையல்ல, ஜமீன்தாரரின் மகன் என்று இறுமாப்புக் கொண்டான். சாதாரணமக்களை முட்ட வருவது போல கோவில்காளை அவனிடம் நடந்து கொள்ளலாமா? தான் யாரென்பதை அவன் அதற்குப் புரிய வைக்க வேண்டாமா? இப்படி எண்ணி அவன் மனம் கொந்தளித்தது.

அச்சமயத்தில் ஒரு சன்னியாசி அவ்வழியே வந்தார். சன்னியாசி அக்கோயில் காளையைப் பற்றி அறியாதவர் அல்ல. அதனால் அவர் மெதுவாக அடி எடுத்து வைத்தவாறே சற்று மெல் லிய குரலில் ''சிவசங்கரா! சிவசங்கரா!'' என்று கூறி அக்காளை யைக் கடந்து சென்றார். அந்தப் பெயர் அந்தக் கோவிலில் குடி கொண்டிருந்த தெய்வத்தினது. அதையாராவது

காரை குருமூர்த்தி

சொன்னால் அந்தக் கோவில் காளை ஆடாமல் அசையாமல் அடங்கி நின்று விடும். எனவே அது அந்த சன்னியாசிக்கு எவ்விதக் கெடு தலையும் செய்யவில்லை.

சிறுவர்கள் எல்லோரும் அப் போது ''அடேயப்பா! சன்னியாசி எவ்வளவு துணிச்சல்காரர்! தைரிய மாகப் போய் காளையைக் கடந்து சென்று விட்டாரே'' என்று கூறி ஆச்சரியப்பட்டார்கள். அப்போது சிவசங்கரன் அவர்களருகே போய் ''இதென்ன பிரமாதம்? நான் அதன் பக்கம் போய் நின்று அதனைத் திக்கு முக்காடச் செய்கிறேன் பார்'' என்று மார்தட்டினான். சிறுவர்களோ ''வேண்டாம். வீணாக வம்புக்குப் போகாதே'' என்று கூறி அவனைத் தடுக்க முயன்றார்கள்.

சிவசங்கரன் அவர்கள் எச்சரித் ததைப் பொருட்படுத்தவில்லை. சன்னியாசி காளையை எப்படி அடக்கினார் என்ற ரகசியம் அவனுக்கு தெரியுமே. 'சிவசங்கரா என்று தானே அவர் கூறினார்? அப்பெயர் அவனுக்கும் அவனது பெற்றோர்கள் வைத்ததுதானே! எனவே தன்னை காளை எதுவும் செய்யாது என எண்ணி சிவசங்கரன் காளையருகில் போனான். அப்போது சிவசங்கரா என்று சொல் வதற்கு பதிலாக கர்வத்தோடு அவன் ''நான் வந்திருக்கிறேன். ஆமாம் நான் தான். நான்தான்'' என்று கூவினான்.

காளையோ வேகமாகப் பாய்ந்து வந்து அவனை முட்டித் தள்ள வந்தது. அது கண்டு சிவசங்கரன் பயந்து அலறியவாறே தலை தெறிக்க ஓடி இடறி ஒரு புதரில் போய் விழுந்தான். உடலில் பலத்த காயம் ஏற்பட்டது. அவன் கண்ணீர் வடித்தவாறே ''நான் செய்த தவறு என்ன? என்று யோசித்தான். கர்வம் கொண்டிருந்த அவனால் தன் தவறை அறிந்து கொள்ள முடியவில்லை தான்!



# ஆருயிர்த் தோழர்கள் !

கோவிந்தனும் கோபாலனும் அடுத்த ஊருக்குப் போய்த் தம் வேலைகளை முடித்துக் கொண்டு தம் ஊருக்குத் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். கோபாலனுக்குத் தற்பெருமை அதிகம்.

அன்றும் சற்று தூரத்தில் இரட்டைக் குதிரை பூட்டிய சாரட்டு வண்டி ஒன்று வரவே அதைச்சுட்டிக் காட்டி கோபாலன் கோவிந்தனிடம் ''அந்த வண்டியில் வருபவர் மருங்காபுரி ஜமீன்தாரர். அவர் என் பள்ளித் தோழர். ஆருயிர் நண்பர். என்னைக்கண்டால் விடமாட்டார். கட்டித் தழுவி குண்டுக் கட்டமாகத் தூக்கி என்னைத் தன் வண்டியில் போட்டுக் கொண்டு தன் அரண்மனைக்கு அழைத்துப் போய்விடுவார். அதனால் என் வேலை எல்லாம் கெட்டுவிடும். அவரது வண்டி போகும் வரை நான் ஒளிந்து கொள்கிறேன்'' என்று கூறி சற்று தூரத்தில் போய் மறைந்து நின்றான்.

ஜமீன்தாரரின் வண்டி கோவிந்தன் நின்ற இடத்திற்குச் சற்று தூரத்தில் நிள்றது. வண்டியிலிருந்த ஜமீன்தாரர் ஆட்களிடம் ''அதோ ஒரு திருடன் மறைந்து நிற்கிறான். அவனைப் பிடித்து உதைத்து விட்டு வாருங்கள்'' என்று கட்டளை இட்டார். அவரது ஆட்கள் கோபாலனைப் பிடிக்க வந்த போது அவன் பிடிபடாமல் தப்பி எங்கோ ஓடி விட்டான்.

ஜமீன்தாரரின் சாரட்டு வண்டி வெகு தூரம் போன பிறகே கோபாலன் கோவிந்தன் இருக்கும் இடத்திற்கு வந்தான். கோவிந்தன் அவனிடம் ''ஜமீன்தாரர் உன்னைப் பிடித்து அடிக்கச் சொன்னாரே. அவரா உன் ஆருயிர் நண்பர்?'' என்று கேட்டான்.

கோபாலனும் ''இதெல்லாம் அவருக்கு விளையாட்டு. சில சமயங்களில் நாங்கள் இப்படிக் கூட விளையாடுவோம்'' என்று கூறிச் சமாளித்தானே பார்க்கலாம் !





# தங்க சிம்மாசனம்

*(கௌண்டனிய நாட்டு மன்னன் ஸ்ரீதத்தன் அவனது மகன் விஜயதத்தன் குருகுலத்தில் கல்வி பயின்று வந்தான். அப்போது ஸ்ரீதத்தன் தன் மகனை உடனே தலைநகருக்கு வரும்படி செய்தி அனுப்பினான். இதன் காரணம் அண்டை நாட்டு மன்னர்கள் கௌண்டனிய நாட்டின் செல்வத்தைக் கொள்ளையடிக்கத் திட்டமிட்டு படையெடுத்து வரப்போவதாக ஒற்றர்கள் வாயிலாக அவன் அறிந்ததுதான். குறிப்பாக ஸ்ரீதத்தன் மைத்துனன் காளிந்தி நாட்டு மன்னன் மாதவசேனன் பணத்தாசை பிடித்து சம்பக மன்னன் மராளனுடன் சேர்ந்து சதியில் ஈடுபட்டான். ராஜகுரு சிவானந்தர் கூறியபடி நகரின் கிழக்கிலுள்ள மைதானத்தில் புதையலுக்காகத் தோண்டும் வேலை ஆரம்பமாகியது. மாதவசேனனின் மகள் ஸ்ரீலேகா ஆண் வேடத்தில் ஸ்ரீதத்தனின் அரண்மனைக்கு வந்து சேரவே ஸ்ரீதத்தன் தன் மகன் விஜயதத்தனுக்கும் அவளுக்கும் காந்தர்வ விவாகம் செய்து வைத்தான். பிறகு)*

காளிந்தி மன்னன் மாதவசேனன் தவியாய் தவித்தான். ஓரிடத்தில் உட்கார்ந்து ஆழ்ந்து யோசனை செய்யலானான். இதே சமயம் சம்பக மன்னன் மராளபூபதியும் அவனது மகன் சக்கரபூபதியும் அடியுண்ட புலிபோல உறுமிக் கொண்டிருந்தார்கள்.

அன்றுதான் ஸ்ரீலேகாவிற்கும் சக்கரபூபதிக்கும் நடக்கப்போகும் திருமணத்தை முன் கூட்டி உறுதி செய்யும் நிச்சயதார்த்த நாள். அதற்கு இரண்டு நாட்கள் முன்னதாகவே மராளனும் சக்கரபூபதியும் காளிந்தி மன்னனின் அரண்மனைக்கு வந்து விட்டார்கள். அந்த நிச்சயதார்த்திற்குப் பத்து நாட்கள் கழித்து காளிந்தி மன்னனும் சம்பகமன்னனும் தம் படைகளோடு போய் கௌண்டனிய நாட்டைக் கைப்பற்றுவது என்பது திட்டம். இது நான்கு மாதங்களுக்கு முன் மாதவசேனன் சம்பக நாட்டிற்குப் போனபோது தீட்டப்பட்ட திட்டமாகும்.

அன்று திட்டத்திற்கு இறுதி வடிவம் கொடுத்த பின் மராளன்



மாதவசேனனிடம் ''நான் சொல்கிறேனென்று தவறாக எண்ணிவிட வேண்டாம். இந்த விஷயத்தை அந்தப்புரப் பெண்மணிகளிடம் கூற வேண்டாம். மகாராணியிடம்கூடச் சொல்லாதீர்கள். இந்த ரகசியம் இப்போதைக்கு நமக்குள்ளேயே இருக்கட்டும். இதை முன்கூட்டியே எச்சரிக்கை செய்வது நல்லது என்று நினைத்தேன்'' என்றான்.

மாதவசேனனுக்கும் மராளன் கூறியது சரியே என்றுபட்டது. ஆனால் தன் மகளின் திருமணத்தை அவளுக்குத் தெரிவிக்காமலே நடத்தி விடுவது என்று அவன் செய்த முடிவு மட்டும் சரியில்லை என்று ஏனோ அவன் அறிவுக்கு எட்டவில்லை. மராளன் ஆட்டி வைக்கும் பொம்மை போலத்தான் ஆடுவதை அவன் சற்றும் உணரவில்லை. எனவே எதையுமே அவன் தன் மனைவிக்கும் தெரிவிக்கவில்லை.

ஆனால் காளிந்தி மகாராணி வசுமதியைப் பற்றி மாதவசேனனும் மராளனும் குறைவாக மதிப்பிட்டு விட்டார்கள். அவளுக்குத் தாம் தெரிவிக்காததால் அவளுக்கு எதுவுமே தெரியாது என்று எண்ணி விட்டார்கள். அவள் போர்க் கலையை நன்கு அறிந்தவள். கூரிய அறிவு படைத்தவள். மாதவசேனன் சம்பக நாட்டிற்குச் சென்றபோது மராளன் அவனை விழுந்து விழுந்து உபசரித்ததையும் குழைந்து குழைந்து பேசியதையும் அவள் கவனித்தாள். இந்த மிகையான உபசரிப்பின் பின்னால் ஏதோ ஒரு ரகசியம் இருக்கிறது என்பதை அவள் புரிந்து கொண்டாள்.

அன்று முதல் அவள் தன் கணவனின் ஒவ்வொரு செயலையும் கவனிக்கலானாள். அவனது போக்கு கௌண்டனிய நாட்டிற்கு எதிராக இருப்பது போலத் தோன்றவே அவள் சில ஒற்றர்களை நியமித்து மாதவசேனனையும் கண்காணித்து அவ்வப்போது தனக்குத் தகவல் கொடுக்க வேண்டுமென்று ஏற்பாடு செய்து கொண்டாள். அப்போது அவளுக்கு விஷயம் புரிந்துவிட்டது.

நிலைமை முற்றித் தன் கையை விட்டுப் போய்விட்டதைக் கண்ட அவள் தன் மகள் ஸ்ரீலேகாவிடம் விவரமாகக் கூறி தன் நம்பிக்கைக்குப்

பாத்திரமான ஒரு பணிப்பெண்ணு டன் அவளைத் தன் அண்ணன் ஸ்ரீதத்தனிடம் அனுப்பிவிட்டாள். நிச்சயதார்த்த நாள்வரை ஸ்ரீலேகா அரண்மனையிலிருந்து ரகசியமாய் வெளியேறி விட்டதை ராணி யாருக்கும் தெரியாமல் செய்துவிட் டாள். நிச்சயதார்த்த நாளன்று ஸ்ரீலேகா காணவில்லை என்பது தெரிந்ததும் அவளும் எல்லோருடன் சேர்ந்து ஆச்சரியப்படுவது போல நடித்தாள்.

தன் மகள் காணாது போய் விட்டாள் எனக் கேட்டது முதல் மாதவசேனன் சித்தப்பிரமை பிடித் தவன் போலாகிவிட்டான். அவன் தனக்குக் கிடைக்க இருந்த பெரும் செல்வமும் தென் சாம்ராஜ்ஜியச் சக்கரவர்த்தி என்ற பதவியும் போயே போய் விட்டதே என்று எண்ணிக் கண்ணீர் வடித்தான். ஸ்ரீலேகா கௌண்டனிய நாட்டிற்குத் தான் போயிருக்கிறாளென்று அவன் உறுதியாய் நம்பினான். தன்னைப் போலவே மராளனும் இது பற்றி ஊகித்து அறிந்திருப்பான் என்று எண்ணி அவன் நடுநடுங்கினான்.

ஸ்ரீலேகா காணவில்லை என்ற செய்தியைவிட ஒற்றர்கள் கூறிய மற்றொரு செய்தி மராளபூபதியை இடிபோல் தாக்கி நிலைகுலைய வைத்தது. அது விஜயதத்தன் குருகுலத்திலிருந்து தன் படிப்பை முடிக்காமலேயே அவசர அவச ரமாக கௌண்டனிய நாட்டிற்குத் திரும்பி வந்ததுதான். விஜயதத்தன்



இல்லாதபோதே கௌண்டனிய நாட்டைக் கைப்பற்றிவிட வேண்டு மென்ற அவனது திட்டம் தவிடு பொடியாகி விட்டது. போய்விட்ட தே ஒரு நல்ல வாய்ப்பு என்று எண்ணி அவன் மனம் புழுங்கி னான்.

அதன் பிறகு மராளபூபதியும் சக்கரபூபதியும் யோசித்து முடிவில் ''சரி, நடந்தது நடந்து விட்டது. அதுபற்றி யோசித்துப் பயனில்லை. நாம் திட்டமிட்டபடி இன்றைக்குப் பத்தாவது நாள் கௌண்டனிய நாட்டின் மீது படை எடுத்துச் செல்வோம்'' என்று மாதவசேன னுக்குத் தகவல் அனுப்பினார்கள்.

அத் தகவல் கிடைத்ததும் மாதவ சேனன் நிலை தடுமாறினான்.



இதற்கு முன் ஸ்ரீதத்தன் அவனது மைத்துனன். ஆனால் இப்போதோ அவன் மகள் ஸ்ரீலேகா ஸ்ரீதத்தனின் மகனை மணக்கும் எண்ணத்துடன் போயிருப்பதால் மாதவசேனன் பெரிய சிக்கலில் அகப்பட்டுக் கொண்டுவிட்டான். மராளனுக்கும் சக்கரபூபதிக்கும் தன் மீது கடுங் கோபம் இருக்குமென அவன் எண்ணினான். படையெடுப்புத் திட்டத்தைப் பாழாக்கி ஸ்ரீதத்தனுடன் தான் சேர்ந்துவிடுவேனோ என்ற ஐயம் கூட மராளனுக்கு ஏற்படலாம். ஒரு வேளை படை எடுத்துப் போய் ஸ்ரீதத்தனையும் விஜயதத்தனையும் தோற்கடித்து விட்டால் அதன்பின் மராளன் தன்னைத் தூக்கி எறிந்து விடுவானோ என்றும் எண்ணி மாதவசேனன் பயப்படலானான். இதனால் இருப்பதை எல்லாம் இழந்து மராளனின் சிறையில் அடைபட்டுத் தான் என்னென்ன கஷ்டங்களை அனுபவிக்க வேண்டிவருமோ என எண்ணி நடுங்கலானான்.

இந்த யோசனையிலிருந்து அவன் மனம் வேறு ஒன்றிற்குத் தாவியது. அவன் தன் மைத்துனன் ஸ்ரீதத்தனுக்கு எதிராகச் செயல்பட முனைந்ததை எண்ணி வருந்தலானான். அப்போது மகாராணி வசுமதி அங்கு வந்தாள். அவள் தன் கணவன் கவலைப்பட்டவாறு உட்கார்ந்திருப்பதைக் கண்டு அவன் மனம் நிம்மதி அடையும் விதமாய் ஒரு மணி நேரம் பேசினாள். அவனது மனதில் நுழைந்திருந்த துரோக சிந்தனையையும், பணத்தாசையையும் அதிகார ஆசையையும் மறையச் செய்ததோடு விஜயதத்தனின் வீரத்தையும் பராக் கிரமத்தையும் எடுத்துக் கூறி மராளன் படையெடுத்துச் சென்றாலும் விஜய தத்தனிடம் தோற்றுப் போய் விடு வான் என்பதை அவன் மனதில் பதியவைத்தாள்.

தன் மனைவி கூறியதைக் கேட்டதும் அவன் மனதில் புதிய ஆசைகள் தோன்றின. ஆனால் தான் விரோதி எனக் கருதிய ஸ்ரீதத்தனும் விஜயதத்தனும் தன்னிடம் எப்படிப் பழகுவார்களோ என்று யோசிக்கலானான். அதனை ஊகித்துவிட்ட வசுமதி ''நடந்ததை நினைத்து வருத்தப்பட வேண்டாம். இப்போது ஒன்றும் குடிமுழுகிப் போய் விடவில்லை. என் அண்ணன்

உங்களது நண்பன்தான். விரோதி யல்ல. அதனால் நீங்கள் அவனுக்கு உங்கள் நட்பைத் தெரிவித்து புறா வாயிலாகத் தகவல் தெரிவியுங்கள். இதற்குப் பிறகு மராளனோடு படை யெடுப்பில் கலந்து கொண்டு போரில் நீங்கள் பின்னாலிருந்து மராளனின் படையைத் தாக்கலாம். அதற்கப்புறம் விஜயதத்தன் தாக்கு வான். அப்போது மராளனின் கதி அதோ கதிதான்! இதற்கு எச்சரிக்கை யுடன் ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்றாள்.

வசுமதி கூறியதைக் கேட்டபின் மாதவசேனனின் மனம் ஆறுதல் பெற்றது. அவன் பெருமூச்சுவிட்ட வாறே ''வசுமதி! இவ்வளவு நாட் களாக உன் அருமை தெரியாமல் இருந்து விட்டேன். நான் அந்த மராளன் பிடியில் சிக்கிக் கொண்டேன். பொருள், பதவி என்றெல்லாம் ஆசைப் பட்டு என் நற்குணங்களை எல்லாம் மறந்து விட்டேன். இப்போது நீ கூறியது என் கண்களைத் திறந்து விட்டது. நீ கூறியது போலவே இப்போது ஸ்ரீதத்தனுக்குத் தகவல் அனுப்பு கிறேன்'' என்றான்.

மறுநாள் மாதவசேனன் அனுப்பிய புறா தன் காலில் கட்டப் பட்ட லிகிதத்தோடு ஸ்ரீதத்தனின் படுக்கையறைச் சன்னலில் அமர்ந்து படபடவென்று தன் இறக்கைகளை அடித்தது. அவன் எழுந்து போய் அச்சன்னலின் கதவுகளைத் திறந் ததும் புறா அறைக்குள் புகுந்து ஸ்ரீதத் தனின் தோளின் மீது அமர்ந்தது.



உடனே அதைப் பார்க்க அதன் காலில் ஒரு கடிதம் இருப்பதை அவன் கண்டான். அதை எடுத்துப் படித்ததும் முதலில் அவனுக்கு எதுவும் புரியவில்லை. உடனே விஜயதத்தனையும், ஸ்ரீலேகாவை யும் அழைத்துவரக் கட்டளையி ட்டான்.

அவர்கள் வந்ததும் ஸ்ரீதத்தன் புறா கொண்டுவந்த லிகிதத்தைக் காட்டி னான். விஜயதத்தன் புன்னகை புரிந் தவாறே அதை வாங்கி ஸ்ரீலே காவிடம் கொடுத்து ''இப்படிப் பட்ட நற்செய்தியைத் தான் எதிர்பார் த்தேன். ஸ்ரீலேகா இங்கு வந்த விட்டால் மாமாவின் மனது மாறி விடும் என்பது எனக்குத் தெரியும்'' என்றான்.

ஸ்ரீதத்தனும் ''விஜயா! இது



நமக்குக் கிடைத்த இரண்டாவது நற்செய்தி. நாம் இன்னும் கொஞ்ச நேரத்தில் ஆரம்பிக்கப்போகும் தோண்டல் வேலைக்கு நல்ல சகுனம்'' என்றான். கொஞ்ச நேர மானதும் ராஜகுரு வரவே, அவ ருடன் சேர்ந்து ஸ்ரீதத்தனும் விஜய தத்தனும் தோண்டும் வேலை நடக்கும் இடத்திற்குச் சென்றார்கள்.

சிவானந்தர் மைதானத்திற்குள் சென்று ஒரிடத்தில் வட்டம் வரை ந்து அங்கு ஜலத்தைத் தெளித்தார். அதன் பிறகு முதலில் அங்கு மண் தோண்டப்பட்டது. அதன் பின் அறுபது வேலையாட்கள் அங்கு தோண்டும் வேலையில் ஈடுபட்டார் கள். உச்சிப் பொழுதாகும்போது பனிரெண்டடி ஆழத்திற்குத் தோண் டப்பட்டு விட்டது. உணவு வேளை என அறிவிக்கப்படவே வேலை யாட்கள் வேலையை நிறுத்திவிட்டு சாப்பிடச் சென்றனர்.

மன்னனும் விஜயதத்தனும் அரண்மனைக்கு வந்து உண்டு சற்று இளைப்பாறினார்கள். அப்போது ஒரு வீரன் வந்து மன்னரையும் இளவரச ரையும் ராஜகுரு வரச் சொன்னதாகத் தெரிவித்தான். அவர்களும் உடனே கிளம்பி ராஜ குரு இருந்த மைதானத் தை அடைந்தார்கள். அவர் சிவானந் தரை அணுகியதும் அவர் பள்ளத்தை எட்டிப் பார்க்கும்படிக் கூறினார்.

அவர்களும் அவர் கூறியபடிப் பார்த்ததும் திடுக்கிட்டு நின்றார்கள். ஏனெனில் கீழே சுமார் பதினைந்தடி நீளமுள்ள பெரிய பாம்பு படம் விரித்துப் படுத்திருந்தது. வேலை யாட்கள் தம் வேலையை நிறுத்தி விட்டு அங்கு ஓரமாக நின்று அந்தப் பாம்பையே பார்த்துக் கொண்டிருந் தார்கள்.

அப்போது சிவானந்தர் ஸ்ரீதத்த னிடம் ''நான் தியானத்தில் இருந்த போது இந்த சர்ப்பம் தான் என் முன் தோன்றியது. பூமிக்குள் மறைத்து வைக்கப்பட்டிருக்கும் புதையலைக் காக்க அதனை மறைத்தவரால் மந்திர சக்தியைப் பயன்படுத்தி சிருஷ்டி செய்யப்பட்ட சர்ப்பம் இது. இதன் வேலை புதையலைக் காப்பது மட்டு மே. இது இதனைச் சிருஷ்டித்த வனின் கட்டளைகளு க்கு மட்டுமே கீழ்ப் படியும். இது புஸ் புஸ்ஸென்று தன் விஷக் காற்றால் எவரையும் புதையலருகே வராமல் தடுத்துக் கொண்டிருக்கிறது. நானே அதன்

உஷ்ணக் காற்றைப் பொருட்படுத்தாமல் கீழே பள்ளத்தில் இறங்கினேன். அது என்னையும் தன்னருகே வர விடாமல் படத்தை விரித்து விரட்டி விட்டது'' என்றார்.

ஸ்ரீதத்தன் ஆச்சரியத்துடன் அந்தப் பாம்பைப் பார்த்தவாறே அதை எப்படி விரட்டுவது என்று யோசிக்கலானான். அப்போது சிவானந்தர் '' சில சமயம் இம்மாதிரியான மந்திரத் தால் கட்டுப்படுத்தப் பட்ட சர்ப்பங்கள் ஒரு குறிப்பிட்ட மனிதன் தன்னருகே வந்தால் காவல் காப்பதை விட்டு விட்டு மறைந்துவிடும். எனவே நாம் முயன்று பார்க்கலாம். இதுவரை வெற்றிகரமாக முன்னேறினோம். இனியும் வெற்றி நமதே என்ற நம்பிக்கையுடன் முயன்று பார்ப்போம்'' என்றார்.

பிறகு விஜயதத்தனிடம் ''நான் பள்ளத்தில் இறங்கி மந்திரங்களை உச்சரித்து பாம்பின் மீது ஜலத்தைத் தெளிக்கிறேன். நீயும் என்னுடன் வந்து எந்த நிலையையும் எதிர்த்துச் சமாளிக்கத் தயாராக இரு'' என்றார். விஜயதத்தனும் வாளை உருவிக் கொண்டு சிவானந்தருடன் பள்ளத்தில் இறங்கினான்.

சிவானந்தர் கீழே நின்று உரக்க மந்திரங்களை உச்சரித்து ஜலத்தை அந்தப் பாம்பின் மீது தெளித்தார். அப்போது பாம்பு விடும் உஷ்ணமான மூச்சுக் காற்று அடங்கியது. அவர் மேலும் சில மந்திரங்களை உச்சரித்த போது அந்தப் பாம்பு ''மந்திரங்கள் தெரிந்த மகானே! நான் ஒரு மாபெரும் பணியைச் செய்ய சிருஷ்டிக்கப்பட்டவன். என்னை சிருஷ்டித்தவர் என்னிடம் ஒரு கேள்வியையும் அதற்கான விடையையும் கூறியுள்ளார். நான் அந்தக் கேள்வியைக் கூறப் போகிறேன். அதற்குச் சரியான விடை கூறுபவருக்கே நான் அடங்கி விடுவேன்'' என்றது.

அதைக் கேட்டு விஜயதத்தனும் அவன் பின்னால் நின்ற ஸ்ரீதத்தனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். அப்போது சிவானந்தர் விஜயதத்தனைப்பார்த்து ''விஜயா! நீ இந்தப் பாம்பின் கேள்விக்கு பதில் சொல்'' என்று கூறினார்.

(தொடரும்)



இந்திய

பாரதப் பண்பாட்டின் வரலாறு:

# 2.மழை பெய்த இரவு

சோமநாதன் தம் அறையில் அமர்ந்து ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார். அப்போது சேகர் தன் தங்கை சியாம ளாவை இழுத்துக் கொண்டு வந்து அவர் முன் நிறுத்தி ''தாத்தா! இவள் சொல்வதைக் கேளுங்கள். ஆரியர் கள் நம் நாட்டின் மீது படை எடுத்து வரவில்லை என்பதை உன்னால் நிரூபிக்க முடியுமா என்று இவள் சவால் விடுகிறாள்'' என்றான்.

சோமநாதனும் ''இந்தியர்கள் தொன்று தொட்டு இங்கே தான் இருக்கிறார்கள். இமயமலைக்கு அப்பாலிருந்து வந்தவர்கள் என்று கூற எவ்வித ஆதாரமும் இல்லை. இந்திய இலக்கியமே உலகில் மிகப் பழமையானது. அதில் எந்த இடத் திலும் இந்தியர்கள் முன்பு இருந்த இடம் பற்றிக் குறிப்பிடப்பட வில்லை. இவ்விஷயத்தைக் குறிப்பி டும் புராணக்கதைகளோ பழக்க வழக்கங்களோ அல்லது வரலாற்று நிகழ்ச்சிகளோ மருந்துக்குக் கூடக் கிடையாது. இன்னும் சொல்லப் போனால் நம் முன்னோர் களே நம் நாட்டிலிருந்து அயல் நாடுகளுக்குச் சென்று நம் பழக்க வழக்கங்களையும் பண்பாட்டையும் பரப்பினார்கள் என்பதற்குதக்க ஆதாரங்கள் எவ்வளவோ உள்ளன'' என்று உரைத்தார்.

அப்போது சேகர் ''தாத்தா! அப்படியானால் ஆரியர்கள் தொலை நாடுகளிலிருந்து நம் நாட்டிற்கு வந்தார்கள் என்ற கூற்று எப்படி நம்மிடையே பதிந்தது?'' என்று கேட்டான்.

சோமநாதனும் ''நீ கேட்டது நல்ல கேள்வியே. நம்மை ஆண்ட ஆங்கி லேயர்கள் இவ்விஷயத்தைக் கூறி நம்மை நம்ப வைத்து விட்டார்கள். இந்தியர்கள் பெரும்பாலானோர் வேறு நாடுகளிலிருந்து இந்தியா வில் குடியேறியதால் அயல் நாடுக ளிலிருந்து வந்த தாமும் இங்கு ஆட்சி புரியலாம் என்ற எண்ணத்தை மக்கள் மனதில் பதிய வைப்பது அவர்களது நோக்கமாக இருக்க லாம். இதில் வருந்தத் தக்க விஷயம் என்னவென்றால் நமது வரலாற்று வல்லுநர்களும் அவர்கள் கூறிய தைக் கண்ணை மூடிக் கொண்டு ஏற்றுக் கொண்டது தான்'' என்று கூறினார்.

இச்சமயத்தில் சேகரைக்காண அவனது சில நண்பர்கள் வந்தார்கள். அவர்களது பள்ளியில் ஆண்டு விழா நடக்க போகிறது. அது பற்றி ஆசிரியர்களிடம் பேச அவர்கள் சேகரையும் தம் தம்மோடு வரும்படி



அழைத் தார்கள். சேகரும் தன் தாத்தாவிடம் விடை பெற்றுக் கொண்டு அவர்களோடு சென்றான்.

அப்போது சியாமளா ''தாத்தா! நீங்கள் சேகருக்கு நசிகேதன் கதையை நேற்று கூறினீர்கள். எனக்கும் அது போன்ற கதைகளைக்கேட்க ஆவலாக உள்ளது. இன்று ஏதாவது ஒரு கதை கூறுங்கள்'' என்று வேண்டினாள்.

சோமநாதன் '' சொல்கிறேன் குழந்தை! முன் காலத்தில் குரு சிஷ்யரிடம் எப்படிப்பட்ட சம்பந்தம் இருந்தது என்பதை விளக்கும் கதை இது. இது கதையே அல்ல. உண்மையில் நிகழ்ந்தது. முதன் முதலில் பெயர் பெற்ற முனிவராக விளங்கிய ஒருவரின் மாணவப் பருவத்தில் நிகழ்ந்த சம்பவம் இது'' என்று சொல்லி அது பற்றி விவரிக்கலானார்.

ஒரு அழகிய பள்ளத் தாக்கில் தௌம்ய முனிவரின் ஆசிரமம் இருந்தது. ஆசிரமத்தைச் சுற்றி உயர்ந்த மலைகளும் அதன் எதிரே சிறு காடும் இருந்தன. ஆசிரமத்தின் முக்கிய பகுதி தான் அவர் நடத்தி வந்த குருகுலம். அவரது பெயர் எங்கும் பரவி இருந்ததால் நாட்டின் பல பகுதிகளிலிருந்து மாணவர்கள் அவரிடம் கல்வி பயில வந்தார்கள் சிலர் யோகாப்பியாசமும் பயின்றார்கள். அது என்ன என்பதை உனக்கும் சேகருக்கும் பிறகு சொல்கிறேன்'' என்றார்.

சியாமளாவும் ''சரி தாத்தா கதையைச் சொல்லுங்கள்'' எனவே அவரும் ''தௌம்யரின் ஆசிரமத்தின் ஒரு பக்கம் ஒரு ஏரியும் அதன் படுகையில் வயல்களும் இருந்தன. ஆசிரம மாணவர்கள் அந்த வயல்களில் உணவு தானியங்களைப் பயிரிட்டு ஆசிரமவாசிகள் உண்ணக் கொடுத்தார்கள்.

ஒரு நாள் விடாமல் மழை கொட்டு கொட்டென்று கொட்டியது. அது அடுத்த நாளும் தொடர்ந்து பெய்யவே ஏரி நிரம்பி விட்டது அப்போது குரு தம் சீடர்களிடம்





இந்த கனத்த மழையில் ஏரிக் கரையில் உடைப்பு ஏற்பட்டு நம் வயல்களெல்லாம் நீரில் மூழ்கும் அபாயம் உள்ளது'' என்று கவலைப் பட்டவாறே கூறினார்.

இதை அரணி என்ற அவரது சீடன் கேட்டு விட்டான். அவன் மிகவும் புத்திசாலி. குருகுல வாசம் முடியவே குருவின் அனுமதி



பெற்று தன் ஊருக்குச் செல்ல வேண்டியவன். வேதங்களை நன்கு கற்று அவை பற்றிப் பிறருக்கு நன்கு விளக்கும் ஆற்றல் பெற்றவன்.

குரு என்ன எண்ணியுள்ளார் என்பதை ஊகித்த அரணி உடனே ஏரிக்கரைக்குச் சென்றான். மழை கொஞ்சம் நின்றிருந்தது. கருமேகங் களினிடயே தென்பட்ட சந்திரனின் ஒளி அவ்வப்போது ஏரிக்கரைமீது விழுந்து கொண்டிருந்தது. ஏரிக்கரையில் ஓரிடத்தில் உடைப்பு சிறிது ஏற்பட்டு நீர் கொஞ்சம் கொஞ்சமாக வயலுக்குள் சென்று கொண்டிருந்தது. அந்த உடைப்பு கொஞ்சம் கொஞ்சமாகப் பெரிதாகுவதை அரணி கண்டான்.

அந்த உடைப்பை அடைக்க அவன் கற்களையும் மண்ணையும் எடுத்துப் போட்டான். அப்போதும் உடைப்பு அடைபடவில்லை. அவனுக்கு ஒரு யோசனை சட்டெனத் தோன்றியது. அவன் உடனே அந்த உடைப்பில் படுத்தான். அதனால் ஏரியின் நீர் வயலில் செல்வது நின்றது. மழை இப்போது பலமாகப் பெய்தது. ஆயினும் அதனைப் பொறுத்துக் கொண்டு அரணி அங்கேயே படுத்துக் கிடந்தான்.

அதிகாலையில் எழுந்த குருவும் மற்ற சீடர்களும் அருணியைக் காணாது தேடலானார்கள். அவர்கள் ஏரிக்கரையில் ஏற்பட்ட உடைப் பையும் கண்டனர். உடனே அருணி யைத் தூக்கி ஓரிடத்தில் படுக்க வைத்து விட்டு எல்லோரும் சேர்ந்து ஏரிக்கரையின் உடைப்பை அடைந் தார்கள்.

அதன் பிறகு அரணியை அவர்கள் ஆசிரமத்திற்குத் தூக்கிச் சென்று



அவனது மயக்கத்தைப் போக்கி னார்கள். அவன் எழுந்து உட்கார்ந்தும் குரு அவனை வாஞ்சையுடன் தடவி ''அருணி! இன்றுடன் உன் ஆசிரமப் படிப்பு முடிந்து விட்டது. இனி நீ உன் வீட்டிற்குச் செல்லலாம்'' என்று கூறினார். அருணியும் குருவை வணங்கி விடை பெற்றுக் கொண்டு தன் ஊருக்குச் சென்றான்.

சோமநாதன் இக்கதையைக் கூறிமுடித்ததும் சியாமளா '' ஆகா! அருணியின் சாகசச் செயல் மிகவும் பாராட்டத்தக்கது'' என வியப் படைந்து கூறினாள். அவரும் ''ஆம் அருணியின் பொறுமையும் பிறர்க்கு உதவும் குணமும் பாராட்டத்தக்கது. அருணிக்கு வைக்கப்பட்ட பரீட்சை இது எனவும் கொள்ளலாம். அதில் அவன் தேர்ந்து விட்டான். நிறையப் படித்திருந்தபோதிலும் கௌரவம் பாராமல் அருணி தன் உடலையே உடைப்பை அடைக்கப் பயன்படுத் தினான். ஏன் இப்படிச் செய்தான்? பொது நலன் கருதித் தான். வயலின் பயிர் ஏரி நீர் பாய்ந்து முழுகி விட்டால் ஆசிரமவாசிகள் உணவு தானியம் கிடைக்காமல் திண்டாடு வார்களே என்றும் அவன் எண்ணிச் செயல்பட்டான். குரு போதித்ததைச் செயலாக்கிக் காட்டுவதே உண்மை யான மாணவனின் கடமை. அதைச் செயலின் வாயிலாக அருணி நிரூபித்து விட்டான் '' என்றார்

சியாமளாவும் '' இது ரொம்ப நல்ல கதை. இதை நான் சேகருக்கும் மற்றவர்களுக்கும் சொல்கிறேன்'' என்று கூறியவாறே எழுந்தாள். சோமநாதனும் ''கதை சொல்வது மட்டுமல்ல வாழ்க்கையிலும் அருணியைப் போல நடக்க காட்ட வேண்டும் என்றார். சியாமளாவும் ''அப்படியே செய்கிறோம்'' என்று கூறி விட்டுச் சென்றாள்.



# ஆமாம், சோம்பேறி தான் !

புலியூரில் பொன்னையன் என்பவன் இருந்தான். அவன் மகா சோம்பேறி. ஒரு வேலையை ஒழுங்காகச் செய்யத் தெரியாதவன். அதனால் அவனுக்குக் கூலி வேலை கிடைப்பது கூடச் சிரமமாக இருந்தது. சரியான வருமானம் இல்லாமல் அவன் சாப்பாட்டிற்கே திண்டாடினான். இப்படி இருந்தும் அவன் தன் சோம்பலை விட்டு விடவில்லை.

ஒரு நாளிரவு ஒரு திருடன் அவன் வீட்டிற்குள் நுழைந்து திருட ஏதாவது கிடைக்குமா என்று பார்த்தான். அங்கு எதுவுமே இருக்கவில்லை. இதைக் கண்டு அவன் ''சீச்சீ! இதுவும் ஒரு வீடா? உபயோகத்திற்கு ஒரு துரும்பு கூடக் கிடைக்கவில்லையே. இந்த வீட்டுக்காரன் முழுச் சோம்பேறி போல இருக்கிறதே!'' என்று உரக்கக் கூறியவாறே வீட்டுக்கதவைத் திறந்து போட்டு விட்டு வெளியே செல்ல முயன்றான்.

அப்போது மூலையில் படுத்துக் கிடந்த பொன்னையன் ''அப்பனே! நீ வந்ததையும் பார்த்தேன். ஏதாவது கிடைக்குமா என்று நீ தேடியதையும் பார்த்தேன். எழுந்து வர சோம்பல். அதனால் எழுந்து வரவில்லை. அந்த வாசல் கதவை மூடி விட்டுப்போ'' என்று திருடனிடம் சொன்னான்.

திருடனோ ''ஒரு காசு சம்பாதிக்கத் துப்பில்லாத சோம்பேறி நீ! அதனால் தான் உன் வீட்டில் தரித்திரம் தாண்டவமாடுகிறது'' என்று கோபமாகக் கூறினான்.

பொன்னையனும் ஆமாம்! நான் சோம்பேறி தான். நான் ஓடியாடி வேலை செய்வதால் என்ன பயன்? உன் போன்ற திருடர்களிடம் நான் சம்பாதித்ததைக் கொடுத்து விட்டு நிற்க வேணடும். அதற்கு பதில் இப்படி சோம்பேறியாக இருப்பதே மேல்'' என்றான்!



# எதில் மகிழ்ச்சி ?

தங்கபுரத்தை ஆண்டு வந்த தங்கராச பூபதிக்கு சதுரங்கம் ஆடுவது மிகவும் பிரியமானது. அவன் யாருடன் சதுரங்கம் விளையாடினாலும் அவனுக்கே வெற்றி கிடைக்கும் அதனால் அவன் அகமகிழ்ந்து போவான்.

ஒருமுறை அவன் அமைச்சர் முத்துவேலருடன் சதுரங்கம் ஆடுகையில் முத்துவேலர் வெற்றி பெற்று விட்டார். அதுவரை ஒரு தோல்வியைக் கூட சந்தித்திராத மன்னன் அந்தத் தடவை தோற்றதால் கோபமும் ஆத்திரமும் அடைந்து எழுந்து சதுரங்கக் காய்களை விட்டெறிந்தும் சதுரங்கப் பலகையைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டும் தன் அந்தரங்க அறைக்குப் போய் விட்டான். இதைக் கண்டு முத்துவேலர் திகைத்துப் போனார்.

மறுநாள் மன்னன் முத்துவேலரை அழைத்து முந்தைய நாள் தான் நடந்து கொண்ட விதத்திற்கு வருத்தம் தெரிவித்துவிட்டு சதுரங்கம் ஆடச் சொன்னான். அன்றைய முதல் ஆட்டத்தில் மன்னனே வென்றான். அப்போது அவன் முகம் ஒரேயடியாக மலர்ந்தது. ஆனால் அடுத்த ஆட்டத்தில் அமைச்சர் வெற்றி பெறவே மன்னன் தனக்கு வந்த கோபத்தையும் ஆத்திரத்தையும் அடக்கிக் கொண்டு எழுந்து தன் அறைக்குப் போய் விட்டான்.

அன்று முதல் அமைச்சரே தினமும் வெற்றி பெற்று வரலானார். மன்னனால் தன் தோல்வியைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. அவனது முகத்தில் மகிழ்ச்சி தென்படவில்லை. அவன் எப்போதும் கவலையுடன் இருக்கலானான். அரசாங்க வேலைகளைக்



சாமி. வெங்கடாசலம்-



கூட சுறுசுறுப்பாக கவனிக்க வில்லை. அப்போது முத்து வேலருக்கு மன்னனின் மனநிலை என்ன என்பது தெரிந்து விட்டது.

ஒரு நாள் அமைச்சர் மன்னனுடன் சதுரங்கம் விளையாடித் தோற்றுப் போனார். அப்போது மன்னன் இலே சாகப் புன்முறுவல் புரிந்தான். அது கண்டு அமைச்சர் மகிழ்ச்சி அடைந் தார். அதன் பிறகு அவர் தினமும் ஆட்டத்தில் மன்னனிடம் தோற்றுக் கொண்டே வரலானார். ஆயினும் அதனால் மன்னன் முன்போல மகிழ் ச்சி அடைந்து விட வில்லை. அமை ச்சரிடம் மன்னன் தனக்கு ஏனோ சதுரங்க ஆட்டம் வரவரப் பிடிக்க வில்லை என்றும் கூறிவரலானான்.

அப்போது அமைச்சர் மன்னனி டம் ஏற்பட்ட மாறுதலைக் கவனித் தார். ஒருநாள் அவர் மன்னனிடம் 'முன்பெல்லாம் நீங்கள் மகிழ்ச்சியு டன் சதுரங்கம் ஆடினீர்கள். இப் போது அவ்வளவு மகிழ்ச்சியாக நீங்கள் விளையாடுகிறதில்லையே. பலநாடுகளில் சதுரங்கப் போட்டி களில் வெற்றி பெற்றுக் கொண்டு வரும் முகுந்தன் என்பவனை வர வழைத்து நீங்கள் அவனிடம் உங்களது இப்போதைய நிலைக்குக் காரணம் என்ன என்று கேட்கலாமே' என்று யோசனை கூறினார்.

மன்னனும் அது நல்ல யோசனை என்று ஏற்று முகுந்தனைத் தன் நாட்டிற்கு வரவழைத்தான். அவனிடம் மன்னன் சதுரங்கம் பற்றி தனக்கு ஏற்பட்ட மன உணர்ச்சி களைக் கூறி அதற்கு என்ன காரணம் என்று கேட்டான். முகுந்தனும் மன்னனுடன் சதுரங்க ஆட்டம் ஒன்றை ஆடிவிட்டு அதன் பிறகு காரணம் கூறுவதாகச் சொன்னான்.

மன்னனும் அமைச்சரின் முன்னி லையில் முகுந்தனுடன் சதுரங்கம் ஆடினான். அதில் மன்னனே வெற் றியும் பெற்றான். அவன் முகத்தில் மகிழ்ச்சியைக் காண முடிந்தது. ஆனால் அடுத்தடுத்த ஆட்டங்களில் முகுந்தனே வெற்றி பெற்று வந்தான். மன்னன் எவ்வளவு தான் யோசித்து விளையாடியும் முகுந் தனை வெல்ல முடியவில்லை. அவனுக்கு கோபமும் ஆத்திரமும் வரத்தான் வந்தது.

அதைக் கண்ட அமைச்சர் 'அரசே!

ஒரு ஆட்டம் நான் முகுந்தனோடு விளையாடட்டுமா?' என்று கேட்டார். மன்னனும் வேண்டா வெறுப்பாக சரி எனக் கூறவே அமைச்சர் முகுந்தனின் எதிரே உட்கார்ந்து அவனுடன் சதுரங்கம் ஆடி எளிதில் அவனைத் தோற்கடித்து விட்டார். அதன் பிறகு ஆடிய ஆட்டங்களிலும் அமைச்சரே வெற்றி பெற்று வந்தார். அதைக் கண்டு மன்னன் மகிழ்ச்சியோடு ஆச்சரியமும் அடைந்தான்.

அப்போது முகுந்தன் மன்னனிடம் 'இப்போது உங்களுக்குக் காரணத்தைச் சொல்லட்டுமா?' என்று கேட்டான். மன்னனும் 'சொல்லுங்கள்' என்றான். முகுந்தனும் 'சதுரங்கம் ஆடுபவன் இருவிதத்தில் மகிழ்ச்சிகளை அடைகிறான். ஒன்று ஆட்டத்தில் அவனடையும் வெற்றியால் கிடைக்கும் மகிழ்ச்சி. மற்றது ஆட்டத்தின் வெற்றி தோல்விகளைப் பற்றிக் கவலைப் படாமல் ஆட்டத்தில் முழுமையாக ஈடுபட்டிருப்பது மகிழ்ச்சியை அளிக்கிறது. முதலாவது வகை மகிழ்ச்சி ஆட்டம் ஆடுபவன் எப்படியாவது ஆடி முடிவில் வெற்றி பெறுவதால் கிடைப்பது. இந்த வகை மகிழ்ச்சி போதைப் பொருளால் ஏற்படும் நிலை போன்றது. மனிதனைத் தனது நிலையில் வைக்காதது. அறிவை மயக்கிவிடுவது. ஆட்டத்தில் முழு ஈடுபாட்டைச் செய்யாதது. இரண்டாவது வகை மகிழ்ச்சி மருந்தைப் போன்றது.



வெற்றி தோல்விகளைப் பற்றிக் கவலைப்படாமல் ஆட்டத்தில் எதிராளி ஆடும் விதத்தை கவனித்து அவனுக்குச் சரியான பதிலடி கொடுத்து ஒவ்வொரு வினாடியும் எச்சரிக்கையுடன் இருந்தும் விளையாடுவதால் ஆட்டம் முடியும் வரை மனதிற்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளிக்கிறது. ஆட்டத்தில் தோற்றால் ஏன் தோற்றோம் எங்கே தவறு செய்தோம் என்று சிந்திக்க வைக்கிறது. இதனால் மறுமுறை ஆடும்போது அத்தவறுகளைச் செய்யாமல் எச்சரிக்கையுடன் விளையாடுகிறான். அதனால் வெற்றி தனக்குக் கிட்டும் என மகிழ்ந்து போகிறான்'.

'அரசே! நீங்கள் ஆட்டத்தில் வெற்றி பெறுவதையே

முக்கியமெனக் கருதுகிறீர்கள். முதல் முறையாக ஆட்டத்தில் அமைச்சரிடம் நீங்கள் தோற்றபோது அதை உங்களால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அதற்குப் பின் ஆடிய ஆட்டங்களில் நீங்கள் வெற்றி பெற்று வந்தும் உங்களுக்கு உற்சாகம் அதிகரிக்கவில்லை. ஏனெனில் எதிராளி தோற்றபோது அவனது முகம் வாடிப்போவதைக் கண்டு நீங்கள் மகிழ்ச்சி அடைய விரும்பினீர்கள். ஆனால் அமைச்சர் தோற்றுக் கொண்டே இருந்தும் அவரது முகத்தில் வாட்டமே தென் படவில்லை. அதனால் உங்களுக்கு மகிழ்ச்சி ஏற்படவில்லை. இதற்கு காரணம் அமைச்சர் வேண்டுமென் றே உங்களிடம் தோற்றுக் கொண் டே இருந்தது தான்' என்ற முகுந்தன் தொடர்ந்து சொன்னான்.

''என்னோடு முதல் ஆட்டத்தில் நீங்கள் ஆடும் விதத்தை கவனித் தேன். இயல்பாகவே நீங்கள் நல்ல சதுரங்க ஆட்டக்காரரானதால் என்னைத் தோற்கடித்தீர்கள். முதல் ஆட்டத்தில் நீங்கள் ஆடும் விதத்தைக் கவனித்து அதன்பின் உங்களுடன் நான் ஆடிய ஆட்டங் களில் சரியான பதிலடி கொடுத்து வந்தேன். நீங்கள் அவற்றை கவனிக்கவில்லை. அதனால் தான் தோற்று வந்தீர்கள்' என்றான்.

அப்போது மன்னன் 'சரி, எம் அமைச்சர் உங்களோடு ஆடியதில் ஒவ்வொரு முறையிலும் வெற்றி பெற்றாரே. அது எப்படி?' என்று கேட்டான். முகுந்தனும் 'அவர்தான் எனக்கு சதுரங்கம் ஆடக் கற்றுக் கொடுத்த ஆசான். அது மட்டுமல்ல, தினமும் பலபுது முறைகளை அந்த ஆட்டத்தில் கற்றுக் கொடுத்தவரும் என் தந்தையும் ஆவார்' என்றான்.

மன்னன் அடைந்த ஆச்சரி யத்திற்கு அளவே இல்லை. அன்று முதல் சதுரங்கத்தில் வெற்றி பெறுவதை மட்டுமே கவனத்தில் கொள்ளாமல் முழுஈடுபாட்டுடன் ஆட்டங்களை ஆடி மகிழ்ச்சி அடையலானான்.



# ஆடுதாண்டும் காவேரி

## மேகதாட்டு

கருத்து : **ஜெயந்தி மகாலிங்கம்**
ஓவியம் : **கௌதம்சென்**




காவேரி நதி சிவசமுத்திரத்தைக் கடந்து வந்ததும் பெங்களூரிலிருந்து 113 கி.மீ தூரத்தில் கனகபுரத்தருகே அர்க்காவதி என்ற ஆற்றைத் தன்னுள் சேர்த்துக் கொள்கிறது. நந்தி துர்க்க மலைச் சாரலிலிருந்து உற்பத்தியாகும் அர்க்காவதி நதியின் குறுக்கே அணைகட்டியுள்ளனர். அதற்கு சாமராஜ சாகர் நீர்த்தேக்கம் என்று பெயர். இந்த நீர்த் தேக்கத்திலிருந்து தான் பெங்களூர் நகரவாசிகளுக்குத் தேவைப்படும் நீர் வழங்கப்படுகிறது. அடர்ந்த காட்டுப்பகுதியில் இரு நதிகளும் சேர்கின்றன. இப் பகுதி பட்டுப்புழுக்களை வளர்க் கும் இடமாகப் புகழ் பெற்றுள்ளது. இங்கு வளர்ந் துள்ள மூங்கில்களில் பட்டுப் புழுக்களின் கூடுகள் ஏராள மாகத் தொங்குவதை வழி நெடுக காணலாம்.

வேகமாக ஓடும் காவேரியில் ஒரு பயங்கரச் சுழல் உள்ளது. அதை ஹன்னெரடுச்சக்ர என்று கூறுகிறார்கள். ஏதாவது ஒரு பொருள் இந்தச் சுழலில் விழுந்து விட்டால் அது கிர் கிர்ரென்று பனிரெண்டு முறை சுழன்ற பின் தான் நீரில் மூழ்கிப் போகுமாம்.

அர்க்காவதி சங்கமத்திற்கு ஐந்து கி.மீ. தூரத்தில்தான் 'மேகதாட்டு' எனப்படும் ஆடுதாண்டும் காவேரி உள்ளது. இரு உயரமான பாறைகளின் கீழ் இங்கு காவேரி பாய்கிறது. 18 மீ. ஆழத்தில் பாயும் இந் நதியில்

மேகதாட்டு





ஹோகனேகல் நீர்வீழ்ச்சி

இரு கரைகளில் இப்பாறைகள் இரு தூண்கள் போல நிற்கின்றன. இவற்றினிடையே உள்ள தூரம் ஒரு ஆடு தாண்டக் கூடியதாகவே மிக்க குறைவாக இருப்பதால் இதற்கு ஆடுதாண்டுவது எனப் பொருள் கொண்ட 'மேகதாட்டு' என்ற பெயரிடப்பட்டுள்ளது.

மேகதாட்டுவிலிருந்து காவேரி முப்பது மைல் தூரம் பாய்ந்து பின் தமிழ் நாட்டில் தொப்பூர் அருகே காவேரி மறுபடியும் உயர மான இடத்திலிருந்து கீழே விழுந்து பாய்கிறது. இங்கு காவேரி இரு பிரிவுகளாகி, மேற்குப் பிரிவு 22 மீ உயரத்திலிருந்து வேகமாக விழுந்து நீர்த்துளிகள் சிதறிப் புகைபோல மேலே எழுகிறது. இந்த இடத்தை ஹோகனேகல் என அழைக்கிறார்கள். புகை படர்ந்தகல் என்பது இதன் பொருளாம். இந்தப் புகைப் படலம் பார்க்க மிக அழகாக இருக்கிறது.

கிழக்குப் பிரிவு மீண்டும் இரு பிரிவுகளாகி ஒரு பிரிவு குறுகிய பாறைகளுக்கிடையே பாய்கிறது. இந்த இடத்தை ஞானதீர்த்தம் என்கிறார்கள். இங்கு குளிக்க வருவோர் பள்ளத்தில் விழாமல் இருக்க இரும்புச் சங்கிலிகள் பொருத்தப் பட்டு உள்ளன.

இங்கு குளிக்கும் துறைக்கு எதிரே தசேசுவரசுவாமி கோவில் உள்ளது. காவேரி தோன்றியதற்குக் காரணமாக இருந்தவர் எனக்கூறப்படும் அகத்திய முனிவர் இந்த ஆலயத்தில் வழிபாடு செய்ததாகக் கூறப்படுகிறது.

ஹொகனேக்கல்லருகேயுள்ள

இளம் பெண் மூங்கிலால் உயரக் கிளம்பி நதியைத் தாண்டுதல்



இயற்கை அழகைக் கண்டு களிக்கவும், நீர்வீழ்ச்சியைக் காணவும் சுற்றுலாப் பயணிகள் செல்ல வட்ட வடிவிலுள்ள பரிசல்கள் உள்ளன. ஒரு பரிசலில் ஐந்து அல்லது ஆறு பயணிகள் மட்டுமே செல்ல முடியும்.

இந்த நீர்வீழ்ச்சியின் கீழே வடக்கில் சின்னாறு என்னும் ஆறு காவேரியில் சேர் கிறது. இதனை சனத்குமார் நதி என்றும் கூறுகிறார்கள். ஏனெனில் இந்த நதி உற்பத்தியாகும் கிணற்றை சனத் குமாரர் என்ற முனிவர்தான் தோண்டினாராம்.

ஹொகேனகல்லருகே மீன்கள் ஏராளமாகக் கிடைக்கின்றன. மாசிர்



வட்ட வடிவப் பரிசல்கள்

என்ற வகைப் பெரிய மீன்கள் இங்கு கிடைப்பது ஒரு சிறப் பாகும். இந்த வகை மீன் ஒவ்வொன்றும் ஐம்பது கிலோவிற்குக் குறையாமல் எடை இருக்குமாம். முன் பெல்லாம் இந்த வகை மீன்கள் ஏராளமாகக் கிடைத்து வந்தன. ஆனால் இப்போது சுற்றுபுறச் சூழல் மாசுபடுத்தப்படுவதால் இவை குறைந்து கொண்டே போய்க் கொண்டிருக்கின்றன.



காவேரியில் கிடைக்கும் மாசிர்மீன்

காவேரியில் கிடைக்கும் மாசிர் மீன். காவேரி ஹெகனே கல்லிருந்து சுமார் 50 கி.மீ தூரத்தில் தமிழ் நாட்டில் நுழையும் இடத்தில் மேட்டூர் உள்ளது. இங்கு காவேரியில் ஒரு அணைகட்டப்பட்டுள்ளது. ஆர்தர் காட்டன் என்னும் ஆங்கிலேயப் பொறியாளர் 1834ல் முதன்முதலாக இந்த அணையைக் கட்டும் யோசனையைக் கூறினார். ஆனால் 1910ல் தான் இதற்கு நிலையான வடிவம் கொடுக்கப்பட்டது. 1928ல் இதைக் கட்டுவதற்கான வேலைகள் துவங்கபட்டன. இதைக் கட்ட மைசூர் சமஸ்தானத்தின் மின் சத்தி பயன்பட்டது.


மேட்டூர் அணை

இந்த அணைக் கட்டு ஆறு ஆண்டு காலத்துள் கட்டி முடிக்கப்பட்டது.

மேட்டூர் அணையின் நீளம் 1590 மீ அகலம் 51 மீ. உயரம் 84.2 மீ. இதன் பரப்பளவு சுமார் 60 சதுர கி.மீ. மதராஸ் மாகாண கவர்னர் சர்ஜார்ஜ்ஸ் டான்லியின் பெயரை இதற்கு ஸ்டான்லி நீர்த்தேக்கம் என்று சூட்டினார்கள். இந்த அணைக்கட்டின் கீழ் மின் உற்பத்தி நிலையம் அமைக்கப் பட்டுள்ளது. இது 36000 கிவா. மின் சக்தியை உற்பத்தி செய்கிறது.

தமிழ் நாட்டில் சேலம் மாவட்டத் திற்கும் ஈரோடு மாவட்டத்திற்கும் எல்லையாகக் காவேரி அமைந்துள்ளது. சேலத்திற்கு வடக்கேயுள்ள மலைப்பகுதியில் உற்பத்தியாகும் திருமணி முத்தாறு சேலத்தில் பாய்ந்து தெற்கிலுள்ள நாமக்கல்லருகே காவேரியில் சேர்கிறது. இந்த நதியின் படுகையில் ஒரு காலத்தில் முத்துக்கள் கிடைத்து வந்ததால் இதற்கு முத்தாறு என்ற பெயர் ஏற்பட்டது. சேலத்து அம்மன் கோவிலுள்ள அம்மன் விக்கிரகத்தை அலங்கரிக்கும் பெரிய முத்து இந்த ஆற்றில் தான் கிடைத்ததாம். சேலம் நகரம் விரிவடைந்து மக்கள் தொகையும் அதிகரித்து விட்டதால் இன்று முத்தாறு சேறும் சகதியும் நிறைந்து விட்டது.

சேலம் கைத்தறி நெசவுத் தொழிலுக்கும் ஏஃகுத் தொழிலுக் கும் பெயர் பெற்றது. துப்பட்டிகள், படுக்கை விரிப்புகள், சரிகைக்கரை பட்டு வேட்டிகள், மாம்பழம் ஆகியவற்றிற்கு சேலம் பெயர் பெற்றது. சேலம் நகரிலிருந்து சற்றுத் தொலைவிலுள்ள சேர்வராயன் மலைகளுக்கிடையே உள்ள ஏற்காடு என்ற ஊர் கோடைகால வாசத்திற்கு ஏற்றது. கடும் கோடையின்போது கூட இங்கு தட்பவெப்ப நிலை மிகக் குறைந்து சில்லென்று இருக்குமாம். அதனால் இங்கு சுற்றுலாப் பயணிகள் ஏராளமாய் வந்து கொண்டே இருக்கிறார்கள்.



# மூன்று விசித்திர வரங்கள்!

முத்தையயனும் சின்னையயனும் அடுத்தடுத்த வீட்டில் வாழும் விவசாயிகள். முத்தையயன் நல்ல உழைப்பாளி. தனக்கு இருக்கும் நிலத்தை உழுது பயிர் செய்துப் பணம் சம்பாதித்து தன் பழைய ஓட்டு வீட்டை மாடி வீடாக்க கட்டி விட்டான். சின்னையயன் தனக்கு சம்மந்தம் இல்லாத விவகாரங்களில் தலையிட்டு வழக்கு, நீதி மன்றம் என்றெல்லாம் போய் தனக்கிருந்த கொஞ்ச நஞ்ச நிலத்தையும் விற்று விட்டான். பழைய வீடு ஒன்றுதான் மிச்சம். அதில் நோயாளியான தாயாருடனும், தொண தொணக்கும் மனைவியுடன் இருந்து ஊரிலுள்ளோரிடமெல்லாம் கடன் வாங்கிக் காலத்தைக் கழித்துக் கொண்டிருந்தான். முத்தையயன் குடும்பத்தை பார்த்து சின்னையயன் குடும்பம் பொறாமையால் வெந்து கொண்டிருந்தது.

முத்தையயனும் சின்னையயனும் மாதம் ஒரு முறை அருகிலிருந்த பட்டணத்திற்குப் போய் வீட்டுக்கு வேண்டிய சாமான்களை வாங்கி சுமையாகக் கட்டித் தலை மீது வைத்துக் கொண்டு காட்டு வழியே வரும் பாதையில் நடந்து ஊர்திரும்புவர்கள். வழக்கம் போல அன்றும் அவர்கள் இருவரும் தலைச் சுமையுடன் பட்டணத்திலிருந்து ஊருக்கு வந்து கொண்டிருந்தார்கள்.

அப்போது சின்னையயனிடம் முத்தையன் ''நம் நாட்டு ராணி திடீரென இறந்து போனதால் மன்னர் துக்கத்தில் மூழ்கி இருக்கிறாராம். இந்த சமயம் பார்த்து நம் அண்டை நாட்டு மன்னன் நம் நாட்டின் மீது படை எடுத்து வரப் போகிறானாம். போர் மூண்டால் என்ன ஆகுமோ?'' என்று கவலைப் பட்டவாறே கூறினான்.

-சுப்பு கிருஷ்ண சாமி-



சின்னய்யனோ ''நாட்டை யார் ஆண்டால் நமக்கு என்ன? இந்த சுமையை தலை மீது வைத்துக் கொண்டு இப்படி மாதா மாதம் வருவது நிற்கவா போகிறது?'' என்றான். முத்தைய்யனோ ''அது சரி இந்த முறை மழை பெய்யவில்லையே. பயிரெல்லாம் வாடிப்போகிறதே'' எனவே சின்னைய்யன் '' அது பற்றி நான் ஏன் கவலைப்பட வேண்டும்? உன்னைப் போல எனக்கு வயலா இருக்கிறது? நம் ஊரில் மழை இல்லை என்றால் நான் வேறு ஊருக்குப் போய் விடுவேன்'' என்றான். இதே சமயம் சின்னையனின் சொந்தக்காரன் ஒருவன் வாடகை வண்டியில் வரவே சின்னைய்யன் வண்டியை நிறுத்தி அதில் ஏறி உட்கார்ந்து கொண்டான். வண்டியும் போய்விட்டது.

முத்தைய்யன் தனியாக வழி நடந்தான். வழியில் கிடந்த மரக்கிளை ஒன்று அவனது காலை இடறி விடவே அவன் குப்புற விழுந்தான். அவனது தலை மீதிருந்த சுமையும் கீழே விழுந்தது. அதிலிருந்த சாமான்கள் சிதறி விழுந்தன. முத்தைய்யன் மெதுவாக எழுந்தான். அப்போது நன்கு இருட்டி விட்டது.

அந்த இருட்டில் கீழே விழுந்து கிடந்த சாமான்களை அவன் பொறுக்கி எடுக்கலானான். அப்போது அவனுக்குப் பழங்கால தாமிர மோதிரம் ஒன்று கிடைத்தது. அவன் அதைத் தன் கைவிரலில் அணிந்து கொண்டான். அப்போது எதிரே சற்று தூரத்தில் பளிச்சென ஒளிவிட்டுக் கொண்டிருக்கும் மாளிகை ஒன்றை அவன் கண்டான். அதற்கு முன் அந்த மாளிகை அங்கே இருக்கவில்லை என்பது அவனுக்குத் தெரியும்.

அவன் அந்த மாளிகையை உற்றுப் பார்க்கையில் சற்று நேரத்திற்கு முன் அவன் அணிந்த தாமிர மோதிரம் விரலை உறுத்தியது. எனவே அதை அவன் வேறு விரலுக்கு மாற்ற எண்ணிக் கழற்றினான். அப்போது எதிரே ஒளிமயமாகத் தென்பட்ட மாளிகை மறைந்து அந்த இடம் இருட்டில் மூழ்கியது.

அதைக் கண்டு ஆச்சரியப்பட்ட முத்தைய்யன் தாமிர மோதிரத்தை

வேறு ஒரு விரலில் போட்டுக் கொண்டான். என்ன ஆச்சரியம்! ஒளி மயமான மாளிகை மீண்டும் தென் பட்டது. அப்போது அவனுக்கு அந்த மோதிரத்திற்கு உள்ள சக்தி என்ன என்பது தெரிந்து போயிற்று. அந்த மோதிரம் ஒருவனது விரலில் இருந்தால் அவனுக்கு அந்த ஒளிமயமான மாளிகை தென்படும் என்பதுவே அது.

அந்த மாளிகைக்குள் போய்ப் பார்க்க வேண்டுமென்ற ஆசை அவனுக்கு ஏற்பட்டது. எனவே அடிமேல் அடி எடுத்து வைத்த வாறே அந்த மாளிகையை அடைந்து உள்ளே சென்றான். முன் ஹாலில் அழகான மூன்று யட்சிணிகள் உட்கார்ந்திருந்தார்கள். சிரித்தும் பேசிக் கொண்டிருந்த அவர்கள் யாரோ வருவதைக் கண்டு ''யார் நீ'' என்று கேட்டார்கள்.

முத்தையன் அவர்களிடம் தன்னைப் பற்றிக் கூறி ''இந்த மாளிகையை ஒரு முறை சுற்றிப் பார்த்து விட்டுப் போய் விடுகி றேன்'' என்றான். அவர்களோ பதறிப்போய் ''இந்த மாளிகைக்குள் மனிதன் எவனும் வரக் கூடாது நீ உடனே இங்கிருந்து போய்விடு வேண்டுமானால் உனக்கு நாங்கள் மூன்று வரங்களைக் கொடுக்கி றோம்'' என்றார்கள்.

முத்தையனும் ''நீங்கள் வரங்கள் கொடுத்தால்தான் நான் போவேன் என்பது இல்லை இப் போதே நான் திரும்பி போய்



விடுகிறேன்'' என்று கூறித் திரும்பலானான். அப்போது அந்த யட்சிணிகள் ''நில் நீ வரங்களை வாங்கிக் கொள்ள விரும்பா விட்டாலும் நாங்கள் அவற்றை கொடுத்தே தீருவோம். எங்கள் பெயர்கள் உதயா, சந்தியா, நிஷா என்பன. நீ வரங்கள் கேட்கும் போது ஒவ்வொருவர் பெயரையும் ஏழு தடவைகள் கூறி நீ விரும்பும் வரத்தைச் சொன்னால் நாங்கள் அந்த வரங்களைக் கொடுப்போம்'' என்றார்கள்.

முத்தையன் உதயாவின் பெயரை ஏழு தடவைகள் சொல்லி ''எங்கள் நாட்டின் மீது படை எடுத்துவரும் மன்னனின் மனம்



மாறி படை எடுக்காமல் திரும்பிப் போய் விட வேண்டும்'' எனக் கூறினான். உதயாவும் ''உன் நாட்டுப் பற்றை மெச்சுகிறேன்'' எனக் கூறி அந்த வரத்தை அளித்தாள்.

அடுத்து அவன் சந்தியாவின் பெயரை ஏழு தடவைகள் கூறி ''எங்கள் ஊரில் மிக அதிக மழை பெய்யாமலும் மழை குறைந்தும் போகாமல் எப்போதும் பச்சைப்ப சேலென்று இருக்க வேண்டும்'' எனக் கூறினான். சந்தியாவும் ''பிறந்த மண் மீது நீ வைத்துள்ள பாசத்தைப் பாராட்டுகிறேன்'' எனக் கூறி அவன் கேட்ட வரத்தை அளித்தாள்.

இதற்குப் பின் முத்தைய்யன் சற்று யோசித்து ''என் குடும்பத்தவர் யாவரும் உள்ளதைக் கொண்டு திருப்தியுடன் இருக்குமாறு வாழச் செய்ய வேண்டும்'' என்று கூறினான். நிஷாவும் ''மிகச் சிறந்த வரத்தைக் கேட்டாய். மனிதன் திருப்தியுடன் இருந்தாலே சுக வாழ்வு வாழ முடியும். நீ கோரிய வரத்தை அளிக்கிறேன்'' என்றாள்.

முத்தைய்யன் அந்த யட்சிணி களை வணங்கி விட்டுத் தன் ஊருக்குச் சென்றான். அப்போது நன்கு விடிந்து விட்டது. வாசலில் நின்று கொண்டிருந்த அவன் மனைவி ''வந்து விட்டீர்களா? ஒரு நல்ல செய்தி. அண்டை நாட்டு மன்னன் நம் நாட்டின் மீது படை எடுப்பதைக் கைவிட்டு தன் செயலுக்காக நம் மன்னனிடம் மன்னிப்புக் கோரினானாம்'' என்றாள். அவள் இவ்வாறு கூறிக் கொண்டிருக்கையில் ஆகாயத்தில் கருமேகங்கள் சூழ்ந்து நல்ல மழை பெய்தது. அது கண்டு முத்தைய்யன் யட்சிணிகள் அளித்த வரங்கள் பலித்தன என்று எண்ணி மகிழ்ந் தான். அவன் தான் அணிந்திருந்த மோதிரத்தைக் கழற்றித் தன் மனை வியிடம் காட்டி காட்டில் நடந்ததை எல்லாம் கூறினான். அவளும் அந்த மோதிரத்தை அவனிடமிருந்து வாங்கிக் கண்களில் ஒற்றிக் கொண்டு பூஜை அறையில் வைத்தாள்.

முத்தைய்யன் அதிகாலையில் வந்து தன் மனைவியுடன் பேசிக் கொண்டிருந்ததை சின்னைய்யன் மறைந்து நின்று ஒட்டுக் கேட்டான்.

உடனே அவன் தன் வீட்டிற்குப் போய் தன் மனைவியிடம் ''நீ அடுத்த வீட்டிற்குப் போய் அங்கு பூஜை அறையில் வைக்கப்பட்டிருக் கும் தாமிர மோதிரத்தை எடுத்து வா. நான் காட்டிற்குப் போய் யட்சிணிகளைக் கண்டு மூன்று வரங்களைப் பெற்று வருகிறேன்'' என்று மகிழ்ச்சிததும்பக் கூறினான்.

சின்னைய்யனின் மனைவி அடுத்த வீட்டிற்குள் போனபோது முத்தைய்யனின் மனைவி கொல் லைப்புறத்தில் ஏதோ வேலையாக இருந்தது கண்டு பூஜை அறைக்குள் சென்றாள். தாமிர மோதிரத்தை எளிதில் கண்டு பிடித்து அதை எடுத்து அவள் தன் மடியில் சொருகிக் கொண்டு தன் வீட்டிற்கு வந்து விட்டாள்.

சின்னைய்யன் அந்த மோதிரத் தைத் தன் மனைவியிடமிருந்து வாங்கித் தன் விரலில் அணிந்து கொண்டு உடனேயே காட்டிற்குச் சென்றான். யட்சிணிகளின் மாளி கையைக் கண்டு அவன் அதற் குள் செல்லவே யட்சிணிகளும் ''யார் நீ? இங்கே ஏன் வந்தாய்?'' என அதட்டிக் கேட்டார்கள். சின்னைய்யனும் ''மூன்று வரங்கள் கேட்க வந்தேன்'' என்றான். யட்சிணிகள் தமக்குள் கலந்து ஆலோசித்துவிட்டு ''சரி மூன்று வரங்கள் கொடுக்கிறோம். ஆனால் நீ அணிந்திருக்கும் தாமிர மோதிரத்தை எங்களுக்குக் கொடுத்து விடவேண்டும்'' என்றார்கள்.



சின்னைய்யனும் ''ஆ! கொடுக் கிறேன்! ஆனால் வரங்களை இங்கே கேட்க மாட்டேன். நான் வீட்டிற்குப் போனதும் ஒரு வரமும் என் தாயார் ஒரு வரமும் என் மனைவி ஒரு வரமும் கேட்பார்கள். அவர்களும் உங்கள் பெயர்களை ஏழு தடவைகள் கூறி வரம் கேட்பார்கள். இதுதானே முறை'' என்று கேட்டான்.

யட்சிணிகளும் ''ஆமாம்'' என்று கூறி அவனிடமிருந்த மோதிரத்தை வாங்கிக் கொண்டார்கள். மறு விநாடியில் யட்சிணிகளோடு அந்த மாளிகை மறைந்து போயிற்று. சின்னைய்யனும் அங்கிருந்து தன் வீட்டிற்கு வந்து சேர்ந்தான். அவன் வரங்களை எப்படிப் பெறுவது



*பயனைப்பற்றிச் சற்றும் கவலைப் படாமல்*
*செயலைப் புரிவதே உன் கடமையாகும்.*

*-பகவத் கீதை*

என்று விவரிக்கவே, முதலில் அவனது தாயார் யட்சிணி உதயாவின் பெயரை ஏழு தடவைகள் உச்சரித்து ''நூறு வயது நான் வாழவேண்டும்'' என்று கோரினாள். நோயாளியாக உள்ள தன் மாமியாருக்கு அவ்வளவு வருடங்கள் பணிவிடை செய்ய வேண்டுமே என்று பயந்து ''எதற்கு அத்தை நூறு வயது? உயிரோடு இருக்கும்வரை நோய் நொடி இல்லாமல் நீங்கள் எழுந்து நடமாடிக் கொண்டிருந்தாலே போதும்'' என்றாள்.

அவ்வளவு தான்! அதுவரை எழுந்திருக்கூட முடியாமல் இருந்த கிழவி 'டக்'கென எழுந்து நிமிர்ந்து உட்கார்ந்தாள். தன் தாய் உடல் நலம் பெற்றதையும் தன் மனைவி ஒரு வரத்தை வீணாக்கி விட்டதையும் கண்ட சின்னைய்யன் இரண்டு வரங்கள் வீணாகி விட்டாலும் நம் வீடு இடிந்துபோயிற்றா என்ன?'' என்றான் கோபமாக. மறு நிமிடமே அவனது வீடு இடிந்து விழவே. சின்னைய்யன் தன் தாயுடனும் மனைவியுடனும் வெளியே ஒடி வந்துவிட்டான். சின்னைய்யனும் தன் அறிவின்மையால் யட்சிணிகள் கொடுத்த மூன்று வரங்களும் வீணாகி விட்டதே என்று எண்ணி இவ்வளவு நடந்த பிறகும் அந்த ஊரில் இருந்தால் தனக்கு அவமானம் என்று எண்ணி தன் மனைவியையும் தாயையும் கூட்டிக் கொண்டு அந்த ஊரைவிட்டே போய்விட்டான்.



ஸ்ரீ கிருஷ்ணர் தூது

# மகாபாரதம்

பரசுராமருக்குப் பின் கண்வ முனிவர் துரியோதனனிடம் ''துரியோதனா! தருமருடன் சமாதானம் செய்து கொள். கௌரவர்களும் பாண்டவர்களும் சேர்ந்தே நாட்டை ஆண்டு வரட்டும். இரு பலசாலிகள் பிரிந்து இருப்பது நல்லதல்ல. இதை விளக்க உங்களுக்கெல்லாம் மாதலியின் கதையைச் சொல்கிறேன்'' எனக் கூறி கதை சொல்லலானார்.

மாதலி தேவேந்திரனின் ரதத்தை ஓட்டுபவன். வெகு நாட்களுக்குப் பிறகு அவனுக்கு அழகான ஒரு பெண் குழந்தை பிறந்தது. அவளுக்கு குணகேசி என்று பெயர் வைத்து அவளை அவள் தாய் தந்தையர் வளர்த்து வந்தனர். அவளுக்கு விவாக வயது வரவே தக்க வரனாக அவர்கள் தேடலாயினர். தேவலோகத்திலும் பூலோகத்திலும் மாதலி தேடிவிட்டு நாகலோகத்திற்கு சென்றான்.

வழியில் அவன் நாரதரை பார்த்தான். இருவரும் வருணனிடம் போனார்கள். வருணனும் இருவரையும் வரவேற்று உபசரித்தான். மாதலியும் தான் நாகலோகத்திற்குச் செல்லும் காரணத்தை அவனிடம் கூறினான். வருணனும் அவர்களை மரியாதையுடன் நாகலோகத்திற்கு அனுப்பி வைத்தான். அங்கிருந்து சென்ற நாரதரும் மாதலியும் நாகலோகத்தில் அலைந்து திரிந்து குணகேசிக்குத் தகுந்த வாலிபனாகத் தேடலானார்கள். சேஷநாகம் இருக்கும் போகவதி புரத்தில் சுமுகன் என்ற நாகவாலிபனை மாதலி கண்டான். அவனே





தன் மகளுக்கு ஏற்றவன் என மாதலி நினைத்து நாரதரிடம் கூறினான்.

நாரதரும் அவனை சுமுகனின் தாத்தாவான ஆரியகனிடம் அழைத்துப் போனுர். மாதலி வந்த விஷயத்தை நாரதர் அவனிடம் கூறினார். அது கேட்டு ஆரியகனுக்கு மனதில் ஒரே மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆனுல் அதனை வெளியே காட்டாமல் அவன் ''நாரதரே, இந்த விவாகத்திற்கு நான் எப்படி சம்மதிப்பது? கருடன் என் மகனைக் கொன்று விட்டான். அடுத்த மாதம் என் பேரனான சுமுகனையும் கொன்று தின்னப் போவதாகக் கூறி இருக்கிறுன். என் மகன் போய் விட்டானே என்ற துயரமும் என் பேரன் இறக்கப் போகிருனே என்ற துக்கமும் இருக்கும் போது எப்படிக் கல்யாணத்தை நடத்துவது?'' என்றுன்.

மாதலியும் சற்று யோசித்து ''நீங்கள் உங்கள் பேரனான சுமுகனை என்னோடும் நாரதரோடும் அனுப்புங்கள். நான் இந்திரனிடம் அவனைக் காட்டி அவனுக்கு நீண்ட ஆயுள் கிடைக்குமாறு செய்கிறேன். கருடன் இவன் வழிக்கே வராமலும் செய்து விடுகிறேன். உங்கள் மனமும் சந்தோஷப்படும்'' என்றுன்.

ஆரியகனும் இதற்குச் சம்மதித்து சுமுகனை மாதலியுடன் அனுப்பி வைத்தான். மாதலியும் அவனை அழைத்துக் கொண்டு இந்திரனிடம் போனுன். அப்போது விஷ்ணுவும் இந்திரனோடு பேசிக் கொண்டிருந்தார். அவர்களிடம் மாதலி சுமுகனைப் பற்றிக் கூறவே விஷ்ணுவும் ''இந்திரா, சுமுகனுக்கு அமிர்தத்தைக் கொடுத்து தேவனாக்கி விடு'' என்று கூறினார். அப்போது இந்திரன் ''நீங்கள் இவனுக்கு அமிர்தத்தைக் கொடுங்கள்'' என்றான். விஷ்ணுவோ ''எல்லா உலகினையும் ஆளும் நீ யாருக்கு பயப்பட வேண்டும்? உம். நீயே அமிர்தத்தைக் கொடு. கருடன் என்ன செய்வானோ பார்க்கலாம்'' என்றுர்.

ஆனுல் இந்திரன் சுமுகனுக்கு நீண்ட ஆயுளை அளித்தான். அமிர்தத்தைக் கொடுக்கவில்லை. மாதலியும் கருடனைப் பற்றிய பயம் இல்லாமல் சுமுகனுக்குத் தன் மகளை மணமுடித்து வைத்தான்.

இதைக் கேட்ட கருடன் கோபமடைந்து இந்திரனிடம் வந்து ''என் இறையை நீ பாதுகாக்கிறாயா? என் பலம் உனக்குத் தெரியாதா? உன்னையே ஒழித்து விடுவேன்'' என்றான்.

அப்போது அங்கிருந்த விஷ்ணு ''கருடா, தற்பெருமை கொள்ளாதே. என் வாகனம் என்பதில் இறுமாப்பு கொள்ளாதே. உண்மையில் நான் தான் உன்னைச் சுமக்கிறேன். தெரியுமா?எங்கே, என் இடது கையை இப்போது நீ தூக்கு பார்க்கலாம்'' எனக் கூறித் தன் இடது கையை கருடனின் முதுகின் மீது வைத்தார்.

அந்த பாரத்தை கருடனால் தாங்க முடியவில்லை. அவன் விழிகள் பிதுங்கின. உயிரே போய் விடும் போலிருந்தது. அவன் விஷ்ணுவின் காலில் விழுந்து தன்னை மன்னிக்கும்படி வேண்டினான்.

கண்வர் இக்கதையைக் கூறி ''துரியோதனா, உனக்கும் கருடனின் கதிதான் ஏற்படும். கிருஷ்ணர் உங்களைக் காக்கவே வந்திருகிறார். எனவே அவர் கூறுவதை கேட்டு நட'' என்றார். துரியோதனன் அப்போது கர்ணனை பார்த்து நமட்டுச்சிரிப்பு சிரித்தான். பின்னர் அவன் ''மகரிஷி! இதெல்லாம் எதற்கு? என் தலைவிதி எதுவோ அதுதான் நடக்கும்'' என்றான்.

அப்போது நாரதர் துரியோதனனிடம் ''துரியோதனா! நல்லது சொல்பவர்கள் உலகில் மிகச்சிலரே இருப்பார்கள். இவர்கள் கூறுவது கசப்பாகவே இருக்கும். உனக்கு



காலவரின் கதையைக் கூறுகிறேன்'' எனக் கூறி கதை சொல்ல ஆரம்பித்தார்.

காலவர் விசுவாமித்திரரின் சீடர். அவர் தன் படிப்பு முடிந்ததும் குருவிற்கு குரு தட்சணை கொடுக்க விரும்பினார். விசுவாமித்திரரோ தனக்கு எதுவும் வேண்டாமென கூறியும் காலவர் கேட்கவில்லை. அப்போது விசுவாமித்திரர் ''ஒரு காது மட்டும் கருப்பாக இருக்கும் வெள்ளைக் குதிரைகளாக எண்ணூறு கொண்டு வா'' என்றார்.

அதைக் கேட்டு காலவர் திடுக்கிட்டார். குதிரைகள் வாங்க அவரிடம் பணம் ஏது? குருதட்சணையாக எதாவது கொடுக்க வேண்டுமெனத்தான் விரும்பினார். ஆனால் விசுவாமித்திரரோ மிகவும்



''இதை முதலிலேயே என்னிடம் சொல்லி இருக்க கூடாதா?'' எனக் கூறி அவரை ரிஷபம் என்ற மலையில் இறக்கினான். அங்குள்ள சாண்டிலி என்ற தபஸ்வி அவர்களை உபசரித்து உணவளித்தார். காலவரும் அப்பகுதியில் எங்காவது தமக்கு வேண்டிய குதிரைகள் கிடைக்குமா என்று பார்க்கலானார். அப்போது கருடன் ''நீ எந்த மாதிரிக் குதிரைகளைப் பார்க்கிறாய்'' என்று கேட்டான்.

அவரும் ''ஒரு காது மட்டும் கருப்பாயும் உடல் முழுவதும் வெள்ளையாக இருக்கும் எண்ணூறு குதிரைகள் வேண்டும். அவைகளைத்தான் தேடிப் பார்க்கிறேன்'' என்றார்.

அரிதாகக் காணப்படும் குதிரைகளைக் கேட்டு விட்டார். அதுவும் ஒன்றா? இரண்டா? எண்ணூறு குதிரைகள். அவற்றிற்கு எங்கே போவது? அவர் மகாவிஷ்ணுவை தியானித்தார். இதற்குள் கருடன் வந்து ''விஷ்ணு என்னை அனுப்பினார். உங்களை எங்கு வேண்டுமானாலும் நான் அழைத்துப் போகிறேன்'' என்றான். காலவரும் கருடன் மீதேறி கிழக்கே போகச் சொன்னார். கருடன் போகும் வேகத்தில் அவரால் எதையும் பார்க்க முடியவில்லை. அவருக்கே மூச்சு திணறியது.

அப்போது அவர் ''கருடா, இவ்வளவு வேகமாகப் போக வேண்டாம். நான் குதிரைகளைக் தேடுகிறேன்'' என்றார். கருடனும்

அதைக் கேட்டு கருடன் விழுந்து விழுந்து சிரித்தான். காலவரோ ''ஏன் சிரிக்கிறாய்! அப்படிப்பட்ட குதிரைகள் இவ்வுலகிலேயே இல்லையா?'' எனக் கேட்டார். கருடனும் அவருக்கு எப்படியாவது உதவி செய்யவே விரும்பினான்.

அப்போது கருடன் ''முதலில் உனக்குப் பணம் தேவை. பிரதிஷ்டாபுரத்தை என் நண்பனான யயாதி ஆண்டு வருகிறான். அவனிடம் போய்க்கேள்'' எனக் கூறி காலவரை யயாதியிடம் அழைத்துப் போனான்.

கருடன் வாயிலாக காலவரைப் பற்றி யயாதி அறிந்து கொண்டு ''கருடா! முன்போல இப்போதெல்லாம் என்னிடம் பணம் இல்லை. என்

மகள் மாதவியை இவருக்கு விவாகம் செய்து வைக்கிறேன். இவரது விருப்பமும் நிறைவேறும்'' என்றான்.

கருடனும் ''காலவரே, நீங்கள் மாதவியை மணந்து கொண்டு நீங்கள் விரும்பும் குதிரைகளை அடையுங்கள்'' எனக் கூறிவிட்டுப் போய் விட்டான். காலவரும் மாதவியோடு போய் அயோத்தி மன்னனான ஹரிஅசுவனைக் கண்டார்.

காலவர் வந்த காரணத்தை அறிந்து ''மகிரிஷியே. என்னிடம் பல குதிரைகள் உள்ளன. ஆனால் நீங்கள் கேட்கும் குதிரைகள் இருநூறு தான் அவற்றில் தேறும்'' என்றான்.

மாதவியும் ''சரி, இப்போது இவற்றை வாங்கிக் கொள்ளுங்கள். இது போல மற்ற மன்னவர்களிடமும் குதிரைகளைப் பெறலாம்'' எனக் கூறி அந்த மன்னனோடு அவள் கொஞ்ச காலம் வாழ்ந்தாள். ஒரு குழந்தையைப் பெற்று அவள் ஹரிஅசுவனிடம் கொடுத்து விட்டு மீண்டும் காலவரிடம் வந்து சேர்ந்தாள். ஹரி அசுவனும் காலவருக்கு அவர் கேட்ட இரு நூறு குதிரைகளைக் கொடுத்து விட்டான்.

காலவர் மாதவியை அழைத்துக் கொண்டு காசி மன்னனான திவோதாசனிடம் சென்றார். அவனிடமும் அவர் கேட்ட குதிரைகள் இருநூறே இருந்தன. மாதவியை அம்மன்னனிடம் அவர் ஒப்படைத்து அக் குதிரைகளைப் பெற்றுக் கொண்டார்.



அம் மன்னனும் தனக்கும் மாதவி மூலம் ஒரு குழந்தை பிறந்ததும் அவளை காலவரிடமே அனுப்பி விட்டான்.

காலவர் அவளை போஜநகர மன்னனான உசீநரன் என்பவனிடம் அழைத்துப் போனார். அவனிடமும் அவர் கேட்ட குதிரைகள் இருநூறே இருந்தன. அவற்றை வாங்கிக் கொண்டு அவர் மாதவியை அம்மன்னனிடம் ஒப்படைத்தார். அவளும் இரண்டு வருட காலம் அவனோடு வாழ்ந்து ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தாள். பிறகு காலவரிடம் வந்து சேர்ந்தாள்.

காலவரும் இன்னும் இருநூறு குதிரைகள் வேண்டுமே. என்ன செய்வதென யோசித்துக் கொண்டிருக்கையில் கருடன் அவர்



நாரதர் இக்கதையைக் கூறி ''பிடிவாதம் பிடித்ததால் காலவர் என்ன பாடுபட வேண்டியதாயிற்று பார்த்தாயா? எனவே நீயும் பிடிவாதம் பிடிக்காதே. நல்லவிதமாக நடந்து கொள்'' என்றார். திருதராஷ்டிரனும் கிருஷ்ணரிடம் துரியோதனனுக்கு அறிவுரை கூறுமாறு வேண்டினான்.

கிருஷ்ணரும் ''துரியோதனா, நீ செய்வது அடாததாகும். நீ உனக்கு துர்புத்தி புகட்டுபவர்களின் பேச்சைக் கேளாதே. பாண்டவர்களுடன் நட்பு கொண்டு யுத்தத்தைத் தவிர்த்து எல்லோருக்கும் நன்மையைச் செய்'' என்றார். பீஷ்மரும் துரோணரும் விதுரரும் அவனுக்கு புத்திமதி கூறினார்கள்.

இதெல்லாம் துரியோதனன் அறிவில் ஏறவில்லை. அவன் கிருஷ்ணரிடம் ''கிருஷ்ணா, எல்லோரும் என்னையே குறை கூறுகிறார்கள். நடு நிலையில் இருக்க வேண்டிய நீங்களும் பாண்டவர்களுக்கு சாதகமாகப் பேசுகிறீர்கள். நான் ஒரு தவறும் செய்யவில்லை. பாண்டவர்கள் சூதாடி வனவாசம் போனார்கள். அவர்கள் நாட்டை ஆட்டத்தில் பந்தயம் வைத்துத் தோற்றுப் போனார்கள். அவர்கள் ஆட்டத்தில் இழந்த நாட்டை நான் ஏன் திரும்ப கொடுக்க வேண்டும்? அது என்னுடையதாகி விட்டது. அவர்கள் அதனை எப்படித் திரும்பக் கேட்கலாம்? அதற்கு அவர்களுக்கு எவ்வித உரிமையும் இல்லை. நான் போருக்கு பயப்பட மாட்டேன். என்

முன் வந்து ''இனி உலகில் ஒரு காது மட்டும் கருப்பாயும் உடல் வெளுப்பாயும் உள்ள குதிரைகளே இல்லை. இதுவரை இந்த மாதவியைக் கொண்டு மூன்று மன்னர்களிடம் அறுநூறு குதிரைகளைச் சேர்த்து விட்டாய். இன்னும் இருநூறு குதிரைகள் தானே வேண்டும். விசுவாமித்திரரோ ராஜரிஷி. அவரிடமே அப்படிப் பட்ட குதிரைகள் இருக்கலாம். எனவே இந்த மாதவியையே விசுவாமித்திரருக்குக் கொடுத்து அறுநூறு குதிரைகளையும் கொடுத்து விடு'' என்றான்.

காலவரும் அது போலவே செய்ய விசுவாமித்திரரும் மாதவியையும் அறுநூறு குதிரைகளையும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார்.

நாட்டைப் பாண்டவர்களுக்குக் கொடுக்கவும் மாட்டேோன். ஊசி முனையளவு இடம் கூட கிடையாது'' என்றான்.

அப்போது கிருஷ்ணன் ''போரைத் தான் விரும்புகிறாய். நீயா தவறு செய்யவில்லை? பாண்டவர் களுக்கு எவ்வளவோ கெடுதல் களைச் செய்தாய். அவர்கள் சமாதானமாகப் போகவே தம் நாட்டைக் கேட்கிறார்கள். அதைக் கொடுத்துவிடு'' எனக் கூறினார்.

துரியோதனன் கோபமடைந்து சபையை விட்டே வெளியேறி னான். அவனது சகபாடிகளும் அவனோடு சென்றனர். கிருஷ்ணரோ திருத ராஷ்டிரனிடம் ''இனி உன் குலமே நாசமடையப் போகிறது'' என்றார்.

துரியோதனன் தன் சகாக்களுடன் ஆலோசித்து கிருஷ்ணரையே சிறை பிடிப்பது என்ற முடிவுக்கு வந்தான். இது கிருஷ்ணருக்கு தெரிந்து விட்டது. சபையோருக்கும் தெரிந்து விட்டது. துரியோதனனை திருதராஷ்டிரன் சபைக்கு அழைத்து கடிந்து கொண்டான். கிருஷ்ணரோ ''நான் ஒருவனாகவா இருக்கிறேன்? என்னுடன் எவ்வளவு பேர்கள் இருக்கிறார்கள் என்று பார், துரியோ தனா!'' எனக் கூறி விசுவரூபம் எடுத்தார். அதில் பிரம்மா, ஏகாதச ருத்திரர்கள், திக்பாலர்கள் அக்கினி, சூரியன், தேவர்கள் யட்சர்கள், கந்தர்வர்கள் ராட்சஸர்கள் அந்த சபையோர், பூலோக, பாதாளலோக வாசிகள் எல்லோருமே இருந்தனர்.

இந்தக் காட்சியை சபையோரால் பார்த்துக் கொண்டு இருக்க முடியவில்லை. கண்களை மூடிக் கொண்டு விட்டனர். கிருஷ்ணர் கொடுத்த திவ்விய திருஷ்டியால் பீஷ்மரும், துரோணரும், விதுரரும் சஞ்சயனும் அந்த விசுவ ரூபத்தைப் பார்த்தனர். கிருஷ்ணர் திருதராஷ்டிரனுக்கும் திவ்விய திருஷ்டியை அளித்து தன் விசுவரூபத்தைப் பார்க்கச் செய்தார்.





# மரக்கத்தி

ஒரு மன்னனிடம் வீரப்பன் என்ற காவலாளி இருந்தான். அரண்மனை வாசலை காத்து வருவது அவனுடைய வேலையாகும். அவனும் அதனைச் செய்து வரலானான். ஒரு நாளிரவு அவன் காவல் காக்கும் பணியில் இருக்கும் போது சற்றுக் கண்ணயர்ந்து விட்டான். அவன் தூங்கிக் கொண்டிருக்கும் போது இரவு வேளையில் நகரைச் சுற்றி பார்க்க வந்த அரசன் காவலாளி தூங்குவதைக் கண்டான். இது கண்டு அவன் ''ஒரு காவலாளி தன் வேலையைச் சரியாகச் செய்யாமல் இப்படியா தூங்குவது? இவனுக்கு சரியான பாடம் கற்பிக்கிறேன்'' என மனதில் எண்ணிக் கொண்டான். எனவே சத்தப்படுத்தாமல் அவனருகே இருந்த அவனது உடைவாளை உருவிஎடுத்துக் கொண்டு அங்கிருந்து போய் விட்டான். அரசாங்கம் வீரனுக்கு ஒரு வாள் தான் கொடுக்கும். அதனை அவன் தன் உயிருக்குச் சமமாகக் கருத வேண்டும்.

அரசன் வந்து போன சற்று நேரத்திற்கெல்லாம் வீரப்பன் கண் விழித்துக் கொண்டான். ஆனால் தன் வாள் உறையில் இல்லாதிருப்பது கண்டு திகைத்துப் போனான். எனவே அவன் அன்று நள்ளிரவு தன் பாராவேலை முடிந்ததும் உடனே தன் நண்பனான ஒரு தச்சனிடம் போய் தன் வாளைப்போல மரத்தால் செய்து தரும்படியும் பிடி மட்டும் அரசாங்க வீரர்களது வாளினது போலிருக்குமாறும் செய்யக் கூறினான். அவனும் அவ்விதமே செய்து கொடுத்தான்.

மறுநாள் காலை காவலாளிகள் அணிவகுப்பு நடக்கையில் வீரப்பன் தன் மரக்கத்தியை உறைக்குள் போட்டுக் கொண்டுதான் வரிசையில் நின்றான். என்றுமில்லாது அன்று அரசன் அந்த அணிவகுப்பைப் பார்வையிட வந்தான். அவனோடு சில வீரர்கள் ஒருவனைக் கைது செய்து கொண்டு வந்திருந்தனர்.

அரசன் அக் கைதியை வீரர்களிடம் காட்டி ''இவன் மாபெரும்

- சா. வெங்கடராமன் -

துரோகி. இவனுக்கு நான் மரண தண்டனை விதித்திருக்கிறேன். என் கண்ணெதிரே இந்த தண்டனையை நிறைவேற்ற வேண்டும்'' எனக் கூறி வீரர்களைப் பார்த்தவாறே வீரப்பனைத் தன்னருகே வருமாறு அழைத்தான்.

வீரப்பனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. ஏனெனில் அவனது உறையில் இருப்பதோ மரக் கத்தி. அதைக் கொண்டு அரசன் கூறும் தண்டனையை நிறைவேற்ற முடியாது. தன் உறையிலிருப்பதோ மரக்கத்தி. குட்டு வெளிப்பட்டு விடுமே! அவனுக்குச் சட்டென ஒரு யோசனை தோன்றியது. எனவே அரசனிடம் அவன் ''ஐயா, என் வேலை பாராக் கொடுப்பது. நான் தலையை வெட்டிப் பழக்கப் பட்டவனல்ல. மேலும் இவனைப் பார்த்தால் நிரபராதியாகவே இருப்பது போலவும் தெரிகிறது. இந்த வேலையை நானா செய்வது?'' என்றான்.

அதற்கு அரசன் ''இவன் குற்றவாளியென எனக்குத் தெரியும். நான் கட்டளையிடுகிறேன். நீ ஒரு காவல் வீரன். காவல் காக்கும்போது உன்னைத்தாக்கி கொல்ல யாராவது முயன்றால் என்ன செய்வாய்? உன் வாளை உருவி அவனை எதிர்த்து சண்டையிட்டு அவனைக் கொல்லத் தானே செய்வாய். எனவே என் கட்டளையை நிறைவேற்று. உம், இவனது தலையை உன் வாளால் வெட்டித் தள்ளு'' என்றான். வீரப்பனும் ''அரசே, உங்கள் கட்டளைக்குக் கீழ்படிகிறேன். ஆனால் என் மனம் என்னவோ இவனை நிரபராதி என எண்ணுகிறது. நான் இப்போதே





*நன்றி மறப்பது நன்றன்று நன்றல்லது*
*அன்றே மறப்பது நன்று*

*-திருவள்ளுவர்-*

கடவுளிடம் வேண்டிக் கொள்கி றேன். இவன் மட்டும் நிரபராதியா னால் நான் இப்பாவச்செயலை செய்ய முடியாமற் போக என் கத்தி மரக் கத்தியாக மாறட்டும். இவன் மட்டும் துரோகியானால் இவனது தலை கீழே உருளட்டும்'' எனக் கூறியவாறே தன் வாளை உருவி னான்.

உறையிலிருந்து மரக் கத்திதான் வந்தது. அதைக் கண்டு எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். அரசனும் வீரப் பனின் சமயோசித புத்தியைக் கண்டு வியப்படைந்தான். அவனைப் பாராட்டியவாறே ''சரி சரி, இவன் நிரபராதிதான் போலிருக்கிறது. அதனால் தான் கடவுளின் அருளால் இவனை வெட்ட வேண்டிய கத்தி கூட மரக் கத்தியாகி இவனைக் காப்பாற்றி விட்டது. இவனை விட்டு விடுகிறேன். நீ மிகவும் நல்லவன். உன்னை என் அந்தரங்கக் காவலாளியாக நியமித்துக் கொள்கிறேன். இந்தா உனக்கொரு வாள்'' எனக் கூறி முன் தினம் எடுத்துச் சென்ற வாளைக் கொடுத் தான்.

வீரப்பன் புன்னகை புரிந்த வாறே அதனைப் பெற்றுக் கொண் டான். அரசன்தான் தன் வாளை முன் தினம் எடுத்துச் சென்றது என்றும் தன் அஜாக்கிரதையை வெளிப்படுத் தவே அரசன் வேண்டுமென்றே பரீட்சித்துப் பார்க்க அதனின்றும் தான் சாமர்த்தியமாகத் தப்பியதை யும் அவன் தெரிந்து கொண்டான். அது முதல் அவன் தன் வேலை நேரத்தின்போது சற்று கூட கவனப் பிசகாக இருந்ததே இல்லை.





# கனவே மாயம்!

ஒரு ஊரில் வேலன், பாலன், நாகன் என்ற மூன்று நண்பர்கள் இருந்தார்கள். இந்த மூவரின் திருமண விஷயத்தில் பணவிஷயத்தால் சிக்கல்கள் ஏற்பட்டன. அந்த மூன்று நண்பர்களின் விவாகங்கள் தடைப்படவே மூன்று நண்பர்களும் ஓரிடத்தில் கூடினார்கள். அவர்கள் ''நமது பிரச்சினைகளுக்கு அடிப்படைக் காரணம் பணம். பணம் இல்லாவிட்டால் எதுவும் நடக்காது. ஆனால் அதைச் சம்பாதிக்க நமக்கு ஒரு வழியும் தெரியவில்லை. எனவே நாம் விரும்பும் திருமணங்கள் நடக்க முடியாததால் நாம் உயிர் வாழ்வது வீணே. ஆகையால் நாம் தற்கொலை செய்து கொள்வோம்'' என்று முடிவு எடுத்தார்கள்.

அவ்வூருக்குச் சற்று தூரத்தில் ஒரு மலை இருந்தது. ஒருநாளிரவு அந்த மூன்று நண்பர்களும் அந்த மலையின் உச்சிக்குப் போய் அங்கு நின்று கண்களை மூடிக் கொண்டு கீழே குதிக்கத் தயாரானார்கள்.

அப்போது ஒரு குரல் ''நில்லுங்கள். குதித்துவிடாதீர்கள்'' என்று கூறி அவர்களைத் தடுத்தது. அவர்களும் கண் திறந்து பார்க்கவே தம் எதிரே ஒரு சன்னியாசி இருப்பதைக் கண்டார்கள். அவர்கள் ஏன் தற்கொலை செய்து கொள்ள முயன்றார்கள் என்பதை விவரமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டபின் அவர் ''கடவுள் நமக்குக் கொடுத்திருப்பது வாழ்க்கை. நாம் வாழ்ந்து காட்டுவதை விட்டு விட்டு அதை இப்படியெல்லாம் முடித்துக் கொண்டால் முதலில் நரகத்திற்குத் தான் போவீர்கள். தற்கொலை செய்து கொள்வது பெரும் பாவம். அந்தப் பாவத்தின் பயனாக நீங்கள்

-கி. அருணா -



மறுபிறப்பில் கீழ்த்தரமான ஜந்துக் களாகத் தான் பிறப்பீர்கள்'' என்றார்.

அது கேட்டு பயந்து போன மூவரும் ''சுவாமி! எங்களுக்கு வாழ்க்கையின் மீதே விரக்தி ஏற் பட்டு விட்டது. அதனால்தான் இந்த முடிவுக்கு வந்தோம். இனி இந்தத் தற்கொலை முயற்சியை விட்டு விடுகிறோம். அடுத்து நாங்கள் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுங்கள்'' என வேண்டி னார்கள்.

அவரும் ''தினமும் பகவானை நினைத்துக் கொண்டு தியானம் செய் யுங்கள். எல்லாவற்றிக்கும் அவரை முழுமையாக நம்பி உங்கள் முயற் சியில் ஈடுபடுங்கள். அப்போது உங்களுக்கு எல்லாம் நல்லதே நடக்கும்'' என்று கூறி அவர்களை ஆசீர்வதித்துவிட்டு அங்கிருந்து சென்று விட்டார்.

மூன்று நண்பர்களும் மலையிலி ருந்து இறங்கித் தம் ஊருக்குத் திரும்பிப் போகும் வழியில் ஒரு மீசைக்கார மனிதனைப் பார்த்தனர். அவன் அவர்களைப் பற்றி விசாரித்து விவரம் தெரிந்து கொண்டான். பிறகு அவன் பலமாகச் சிரித்தவாறே ''நீங்கள் விரைவில் நிறையப் பணம் சம்பாதிக்கும் வழியைக் காட்டு கிறேன். உங்கள் பிரச்சினைகள் அதனால் மிக எளிதில் தீர்ந்துவிடும் என்னோடு வாருங்கள். அந்த வழி என்ன என்று சொல்கிறேன்'' என்றான்.

மூவரும் அவன் பின்னால் சென்ற னார். அவன் அவர்களைத் தன் இருப் பிடத்திற்கு அழைத்துப் போய் அவர்களுக்கு குடிக்கப் பானம் கொடுத்தான். அதைக் குடித்த சற்று நேரத்தில் அவர்கள் தம் நினைவை இழந்து விழுந்து விட்டார்கள். அப்போது வேலன் ஒரு கனவைக் கண்டான். அவன் ஒரு ராஜ குமாரனாக ஆகிவிடவே, வள்ளியின் தாய் தந்தை அவனைத் தேடிக் கொண்டு வந்து வள்ளியை அவனு க்கு மணம் செய்து வைத்தார்கள். அவர்களது வாழ்க்கை இன்பகர மாய்க் கழிந்து கொண்டிருந்தது. இதுதான் அந்தக்கனவு.

பாலனும் ஒரு கனவு கண்டான். பத்மா அவளது தாய் தந்தையர்களின் பேச்சை சட்டை செய்யாமல் வீட்டி லிருந்து வெளியேறி பாலனைக் கண்டு அவனை மணந்து கொண்டு

விட்டாள். இதனால் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கிப் போனான். இதுதான் பாலன் கண்ட கனவு.

நாகன் கண்ட கனவில் வட்டி வியாபாரி எவ்வித நிபந்தனையும் விதிக்காமல் அவனைத் தன் மாப் பிள்ளையாக்கி கொண்டு விட்டான். நாகனும் தன் இல்வாழ்க்கையை சொர்க்க போகம் போல இனிதாகக் கழித்து வந்தான். இது நாகன் கண்ட கனவு.

மூவரும் தம் நினைவிற்கு வந்ததும் எழுந்து உட்கார்ந்து தாம் கண்ட கனவுகளைக் கூறி சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார்கள்.

அப்போது மீசைக்காரன் வந்து அவர்களிடம் ''நான் உங்களுக்குக் கொடுத்த பானத்தில் போதகம் என்ற அற்புதமான மருந்தைக் கலந்து கொடுத்தேன். அதன் பயனாக உங்களுக்கு சுகமயமான கனவுகள் வந்திருக்கின்றன. அந்த மருந்து போதக மலர்களிலிருந்து தயாரிக்கப் பட்டது. இங்கு போதகச் செடிகள் நிறைந்த பெரிய தோட்டம் உள்ளது. அதில் வேலை செய்ய எனக்கு ஆட்கள் தேவை. உங்களை நான் வேலைக்கு அமர்த்திக் கொள்கி றேன். ஒரு மாத காலம் நீங்கள் வேலை செய்தால் ஒவ்வொரு வருக்கும் லட்சம் வராகன்கள் கொடுக் கிறேன்'' என்றுகூறி அந்த மூவரை யும் கூட்டிக் கொண்டு போதகத் தோட்டத்தை காட்டக் கிளம்பினான். அவர்கள் போய்க் கொண்டிருக் கையில் எங்கிருந்தோ ஒரு விஷப்



பாம்பு வந்து நாகனைத் தீண்டி விட்டு ஓடியது.

அதைக் கண்ட மீசைக்காரன் ஆச்சரியப்பட்டு ''என்ன ஆச்சரியம்! எவ்வளவு காலம் இங்கு இருந்து வருகிறோன் இப்படி ஒரு நாள் கூட நடந்ததில்லையே. சரி, கவலை வேண்டாம். பக்கத்திலேயே ஒரு ஆசிரமம் இருக்கிறது. அங்கு தக்க வைத்தியம் செய்து இவனைக் காப்பாற்றிவிடலாம்'' என்றான்.

நாகனைத் தூக்கிக் கொண்டு அவர்கள் அந்த ஆசிரமத்தை அடைந் தார்கள். மீசைக்காரன் ''நான் இந்த ஆசிரமத்திற்குள் செல்லமாட்டேன். நீங்கள் இருவரும் உங்கள் நண்ப னுக்கு தக்க சிகித்சை அளிக்கச் செய்து இவன் குணமடைந்த பிறகு



மூவரும் என்னிடம் வாருங்கள்'' என்று கூறி அவர்களை ஆசிரம வாசலிலேயே விட்டு விட்டுப் போய் விட்டான்.

நாகனைத் தூக்கிக் கொண்டு பாலனும் வேலனும் ஆசிரமத்துள் சென்றார்கள். அந்த ஆசிரமத்து சன்னியாசிதான் அவர்கள் மூவரும் தற்கொலை செய்து கொள்ளப் போனதைத் தடுத்து நிறுத்தியவர். அவரைக் கண்டதும் பாலனும் வேலனும் ஆச்சரியப்பட்டார்கள்.

சன்னியாசியும் நாகனுக்குத் தக்க சிகித்சை அளித்து அவனது உடலிலிருந்த பாம்பின் விஷத்தை இறக்கினார். சற்று நேரத்தில் நாகன் கண் விழித்து எழுந்து உட்கார்ந்தான். அப்போது சன்னியாசி அவர்களிடம் ''நீங்கள் உங்கள் ஊருக்குப் போகவில்லையா?'' என்று கேட்டார்.

அவர்களும் ஊருக்குப் போகும் போது மீசைக்காரனைச் சந்தித்ததையும் அவன் பருகக் கொடுத்த பானம் பற்றியும் போதகம் பற்றியும் கூறினார்கள். அப்பானம் பருகி தாம் கண்ட இன்பக் கனவுகள் பற்றியும் விவரித்தார்கள். அப்போது சன்னியாசி ''சரி, இனி நீங்கள் என்ன செய்யப் போவதாக எண்ணி இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

மூவரும் ''நாங்கள் அந்த மீசைக்காரனிடம் வேலைக்கு அமர்ந்து போதகம் பருகி ஒரு மாத காலத்தில் லட்சம் வராகன்கள் சம்பாதிக்கப் போகிறோம்'' என்றார்கள். அவரும் ''உங்களுக்கு மிகவும் பசியாக இருக்கும் உங்களுக்குப் பிடித்தமானதைச் சொன்னால் அவை கிடைக்கும்படிச் செய்கிறேன்'' என்றார். அவர்களும் தாம் விரும்பும் தின்பண்டங்களைக் கூறினார்கள். சன்னியாசி அவர்கள் மூவரையும் தடவவே அவர்கள் தம் நினைவை இழந்து விழுந்து கிடந்தார்கள்.

அந்த நிலையில் அவர்கள் தாம் விரும்பிய தின்பண்டங்களை எல்லாம் சாப்பிடுவது போலக் கனவு கண்டார்கள். கனவு கண்டு முடிந்ததும் அவர்கள் கண் விழித்துப் பார்த்தார்கள். அப்போது சன்னியாசி புன்னகை புரிந்தவாறே அவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு கொய் யாப் பழம் வீதம் கொடுத்தார். ''இப்போதைக்கு இது தான் நான் கொடுக்க முடியும். இதைச் சாப்பிட்டு திருப்தி அடையுங்கள்'' என்றார்.

அவர்கள் கொய்யாப்பழங் களைத் தின்றபின் சன்னியாசி ''நீங்கள் கனவில் விதவிதமான தின்பண்டங்களைச் சாப்பிட்டீர்கள். இப்போதோ ஒரு கொய்யாப்பழம் தான் சாப்பிட்டீர்கள். இவற்றில் உங்களுக்கு எது மிகவும் திருப்தியை அளித்தது'' என்று கேட்டார்.

வேலன் சிரித்தவாறே ''கனவில் எதைக் கண்டாலும் அது உண்மை யல்ல. கற்பனைதான். கற்பனையில் அடையும் மகிழ்ச்சி நிலையான தல்ல. உண்மையில் நடந்ததில் கிடைக்கும் மகிழ்ச்சியே திருப் தியை அளிக்கும். இதில் சந்தேகமே இல்லை'' என்றான்.

அதைக் கேட்ட சன்னியாசி போதகம் என்பது போதைதரும் நச்சுப் பொருள். அது வாழ்க்கையைக் கனவாக்கி விடுகிறது. அக் கனவுக ளால் நீங்கள் எவ்வளவு சுகத்தை அனுபவித்தாலும் அவை ஒருப் போதும் உண்மையாகிவிடாது. அப்படிப்பட்ட போதகத்தை நீங்கள் பருகுவதோடு அச் செடிகளை வளர்க்க மீசைக்காரனுக்கு நீங்கள் உதவுவது எவ்வளவோ பேர்களின் வாழ்க்கையை நாசப் படுத்துவதாகும், சுகம் கொஞ்சமாக இருந்தாலும் ஆரோக்கிய வாழ்வு வாழ்வது மேலா அல்லது உடல் நலம் குன்றி இன்பகரமான கனவுகளைக் கண்டு வாழ்வது மேலா? இந்த இரண்டில் எது வேண்டுமென்று நீங்கள் முடிவு செய்து கொள்ளுங் கள்'' என்றார்.

வேலனும் பாலனும் நாகனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். மீசைகாரப் பேர்வழி சமூகத்துரோகி என்பது அப்போது அவர்களுக்குப் புரிந்தது. மூவரும் ஒரே குரலில் உண்மை வாழ்வில் கிடைக்கும் சுகம் கொஞ்சமானாலும் திருப்தியை அளிக்கும். கனவு மாயமே. வாழ்க்கைதான் நிஜம். எனவே கனவு தரும் போதைப் பொருளான போதகம் எங்களுக்கு வேண்டாம்'' என்றனர்.

சன்னியாசியும் அவர்களைப்பா ராட்டி ''இனி நீங்கள் உங்கள் ஊருக்குப் போய் சுக வாழ்வு வாழுங்கள்''. என்று கூறி அனுப்பினார்.



# கண்டு பிடியுங்கள் எழுதுங்கள்

இந்த இதழில் வெளியிடப்பட்ட வினாக்களின் விடைகள் அடுத்த இதழில் பிரசுரிக்கப்படும். இதனால் நீங்கள் பாரததரிசனப் போட்டியின் விடைகளை அனுப்பலாம். அதற்கான முயற்சியில் நீங்கள் ஈடுபடவேண்டும். இதற்கு முன் வெளியான இதழைக் கவனமாகப் படியுங்கள். அதன் கதை உங்களுக்கு ஏன் பிடித்தது என்பதை 20 வாக்கியங்களில் எழுதி அனுப்புங்கள். உங்கள் வயது, மாணவரானால் கல்வி பயிலும் பள்ளியின் பெயர், வகுப்பு, உங்கள் முழுமுகவரி ஆகியவற்றையும் எழுதி விடைகளுக்குக்கீழ் நீங்கள் உங்கள் கையொப்பமிட்டு எங்களுக்கு அனுப்ப வேண்டும். உங்கள்கையொப்பமே என உறுதி செய்ய உங்கள் ஆசிரியரோ அல்லது உங்களது தாய் தந்தையரின் ஒருவரது கையொப்பமோ உடன் இருக்க வேண்டும், விடைகளை பாரத தரிசன வாசகர்கள் போட்டி'சந்தமாமா பில் டிங்ஸ், வடபழனி, சென்னை 600026 என்ற முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

**முதல் பரிசு ரூ 1000/-**
**இரண்டாவது பரிசு ரூ 500/-**

**மேலும் ஐந்து ஊக்கப் பரிசுகள் பரிசுகள் ஒவ்வொன்றும் ரூ 200/-**






**பாரத தரிசனம் வாசகர்களுக்குப் போட்டி**

புயலடிக்கும் இரவு. ஒரேயடியாக முழுவதும் நனைந்த ஆடைகளுடன் வாலிபன் ஒருவன் நதிக்கரையிலுள்ள ஒரு வீட்டின் கொல்லைப்புறக் கதவைத் தட்டினான். விளக்குடன் வந்த இளம் பெண் கதவைத் திறந்து அவனைப் பார்த்து ஆச்சரியத்துடன் ''நீங்களா? இந்த நள்ளிரவில் இவ்வளவு தூரம் நதியைக் கடந்தா வந்தீர்கள்?'' என்று கேட்டாள். அந்த வாலிபனும் ''உன்னை உன் பிறந்த வீட்டில் விட்டு விட்டு என்னால் ஒரு வினாடி கூட என் வீட்டில் இருக்க முடியவில்லை'' என்றான். ''உங்கள் மனைவியான என் மீது கொண்டுள்ள அன்பை நீங்கள் கடவுள் பால் காட்டினால் எவ்வளவு நன்றாக இருக்கும்'' என்றாள் அந்த இளம்பெண். மறு கணமே இந்த வாலிபனின் வாழ்க்கையில் பெருத்த மாறுதல் ஏற்பட்டது. அவன் மனம் கடவுள் பால் செல்ல, நாளடைவில் அவன் கடவுளின் பெரும் பக்தனாக விளங்கினான்.

**இரு கடவுள் பக்தர்களின் வாழ்வில் நடந்த நிகழ்ச்சியாக இதனைக் கூறுகிறார்கள். அந்த இரு பக்தர்கள் யார்?**

**நம் புராணங் களில் இந்த ஜதைப் பெயர்கள் ஒன்றுக்கு மற்றது எவ்வாறு சம்மந்தபபட்டது?**



**விஞ்ஞானமும் இந்திய மொழிகளில்**

# பரிசுகளை வெல்லுங்கள்



1. முதன் முதலான இந்திய வைத்திய நூல் எது? அதன் ஆசிரியர் யார்? அவர் வாழ்ந்த காலம் எது?
2. அறுவை சிகிச்சைக்கான முதன் முதலான இந்திய நூல் எது? அதன் ஆசிரியர் யார்? அவர் வாழ்ந்த காலம் எது?
3. நம் நாட்டைப் பற்றிய முதலாவது வரலாற்று நூல் எது? அதன் ஆசிரியர் யார்? அவர் எந்த நூற்றாண்டில் இருந்தார்?
4. நம் நாட்டு சமூக, அரசியல், நீதித்துறை சம்மந்தமான முதல் நூல் எது? அதன் ஆசிரியர் யார்? அவரது காலம் எது?
5. இந்திய நாடகக் கலை தொடர்பான முதன் முதலான நூல் எது? அதன் ஆசிரியர் யார்? அவரது காலம் எது?







ஏ) அபிமன்யு - பலராமர்
பி) உக்கிரசேனன் - பிரத்யும்னன்
சி) கடோத்கசன் - சிசுபாலன்
டி) கீசகன் - பரீட்சித்து
இ) கர்ணன் - சுபத்திரை

**நிபந்தனைகள்!**

1) சந்தமாமா இந்தியாலிமிடெட் நிறுவனத்தில் பணிபுரிபவர்களோ, அதன் தொடர்புடையவர்களோ, அவர்களது உறவினர்களோ இப்போட்டியில் கலந்து கொள்ளக்கூடாது.
2) நடுவரின் தீர்ப்பே முடிவானது. இது சம்மந்தமாக கடிதப் போக்குவரத்து கிடையாது.
3) கையெழுத்து தெளிவாக இல்லாவிடைத்தாள்கள் நிராகரிக்கப்படும்.
4) போட்டியின் முடிவுகள் அம்புலிமாமா ஜூன் இதழில் பிரசுரிக்கப்படும்.
5) விடைகள் மார்ச் 31ந் தேதிக்குள் வந்து சேரவேண்டும்.

**விநோதமும் மிளிற**
**அம்புலிமாமாவே தனிச்சிறப்பானது.**



# பாரத நாடு

## அன்றும் இன்றும்

சென்னை மாநகரம்



அண்மையில்தான் தமிழ் மாநிலத்தின் தலைநகரின் பெயர் சென்னை என்று மாற்றப்பட்டது. இதற்கு முன் இது சென்னப்பட்டணம் என்றும் மதராஸ் என்றும் குறிப்பிடப்பட்டு வந்தது. ஒரு நகருக்கு ஒன்றிற்கும் மேற்பட்ட பெயர்களா என்று ஆச்சரியப் படுகிறீர்களா? அதற்குப் பல காரணங்கள் உண்டு.

கடற்கரைப்பகுதியில் கிழக்கிந்தியக் கம்பெனி தன் கோட்டையைக் கட்டியபோது அங்கு சென்னகேசவப்பெருமாள் ஆலயம் இருந்ததால் அதற்கு சென்னப்பட்டணம் எனப் பெயர் ஏற்பட்டதாகச் சிலர் கூறுகிறார்கள். வேறு சிலரோ இங்கு முதலில் இராணுவ முகாமை அமைத்த பிரான்சிஸ்டே சந்திரகிரி மன்னனின் பிரதிநிதியான தாமர்ல வெங்கடப்ப நாயுடுவிடமிருந்து இந்த இடத்தை வாங்கியதாயும் அப்போது நாயுடு அப்பகுதிக்குத் தன் தந்தையின் பெயரான சென்னப்பநாயுடுவின் பெயரை வைக்க வேண்டுமென நிபந்தனை விதித்ததால் அப்பகுதிக்கு சென்னப்பட்டணம் எனப் பெயர் சூட்டப்பட்டது எனக் கூறுகிறார்கள்.

இப்பகுதியில் மதர்ஸா என்ற இஸ்லாமியப் பள்ளி ஒன்று இருந்ததால் இப்பகுதிக்கு மதராஸ் என்ற பெயர் வந்ததாக சிலர் கூறுகிறார்கள். வேறு சிலர் மதர்ஸன் என்ற முஸ்லிம் தலைவர் இருந்ததால் இப்பகுதிக்கு மதராஸ் எனப் பெயரிடப்பட்டது என்று கருதுகிறார்கள். இன்னும் சிலரோ இப்பகுதியில் மதேரா என்ற பெயர் பெற்ற போர்த்துக்கீசியக் குடும்பம் ஒன்று வாழ்ந்ததாலேயே இதற்கு மதராஸ் என்ற பெயர் ஏற்பட்டது என்றும் கூறுகிறார்கள்.



டில்லி, வாரணாசி, மதுரை, காஞ்சி போன்ற நகரங்களைப் போல சென்னை மிகப் பழைய நகரம் அல்ல. ஆயினும் இதற்குப் பழங்காலம் பற்றிய பெருமை ஒன்று உண்டு. இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் மயிலாப்பூரில் வாழ்ந்த திருவள்ளுவர் தாம் 'தமிழ் மறை' எனப்படும் திருக்குறளை இவ்வுலகிற்குத் தந்தவர்.



ஏசு நாதரின் சீடர்களில் ஒருவரான செயிண்ட் தாமஸ் கி.பி 52ல் நம் நாட்டிற்கு வந்தாராம். முடிவில் அவர் மதராஸை அடைந்து அங்குள்ள ஒரு சிறு மலையின் உச்சியில் தான் உயிர் துறந்தாராம். அதனால் தான் அந்த மலைக்கு செயிண்ட் தாமஸ் மவுண்ட் என்ற பெயர் ஏற்பட்டதாம். அவரது உடல் அடக்கம் செய்யப்பட்ட சாந்தோம் கதீட்ரல் கூட இந்நகரில் தான் உள்ளது.

பதினேழாவது நூற்றாண்டில் செண்ட் ஜார்ஜ்கோட்டை கட்டப்பட்டது. இக்கோட்டைக்குள் தான் தமிழக அரசின் தலைமைச் செயலகம் தற்போது செயல்பட்டு வருகிறது.

மயிலாப்பூரின் கபாலீசுவரர் ஆலயமும், திருவல்லிக்கேணி பார்த்த சாரதி கோவிலும் மிகப் பழைமையானவை. பேரும் புகழும் பெற்றவை. சென்னையில் அடையாரில் உலக பிரம்மஞான சபையின் தலைமை அலுவலகம் உள்ளது. இங்கு கலாக்ஷேத்திரம் என்ற அமைப்பு இசை, நடனம் முதலியவற்றை கற்பிக்கும் கேந்திரமாக உள்ளது.

. சென்னையின் மெரினா கடற்கரை மிக அழகானது. 12 கி.மீ. நீளமானது. உலகிலேயே இது இரண்டாவது நீளமான கடற்கரை. வட அமெரிக்காவிலுள்ள கலிபோர்னியா லாங் பீச் தான் உலகிலேயே மிக நீளமான கடற்கரை அதற்கு அடுத்ததாக வருவது சென்னை மெரீனா கடற்கரை தான்.

சென்னைக்கு அருகே பல சுற்றுலா இடங்கள் உள்ளன. இதற்குச் சற்றுத் தெற்கில்தான் மகாபலிபுரம் எனப்படும் மாமல்லபுரம் உள்ளது. பழங்காலச்சிற்பக்கலையை உயர்த்திக் காட்டும் சிற்ப வடிவங்கள் இங்கு ஏராளமாக உள்ளன. ஒரே கல்லில் வடிக்கப்பட்ட ரதங்களை இங்கு காணலாம். இவையாவும் உலகப்புகழ் பெற்றவை.



சென்னையில் பல பல்கலைக் கழகங்கள் உள்ளன. தேசீய நூலகம் ஆர்ட் காலரி, வள்ளுவர் கோட்டம், அருங்காட்சியகம், விலங்கினப் பூங்கா மற்றும் பல அழகிய பூங்காக்களும் இங்கு உள்ளன. இந்நகரம் திரைப்படத் தொழிலுக்கும் பெயர் போனது. தற்போது தென்னிந்தியாவிலேயே மிகப் பெரிய நகரம் சென்னைதான்.




## திபெத்தின் மீது மீண்டும் உலகப் பார்வை

பல ஆண்டுகளுக்கு முன் பல விஷயங்களைப் பற்றிய முடிவுகளுக்கு பலப்பிரயோகம் தான் செய்யப்பட்டது. ஆனால் இரண்டாவது உலகப் போர் (1939-1945) முடிந்தபின் அந்த நிலை மாறி அரசியல் பிரச்சினைகள் பேச்சு வார்த்தைகள் வாயிலாக சமாதானமாகத் தீர்க்கப்பட்டு வருகின்றன.

ஆயினும் இன்னமும் பலப்பிரயோகம் இருந்தே வருகிறது. இந்தியாவில் பல சமஸ்தானங்கள் இருந்ததை நீங்கள் அறிவீர்கள். இந்தியாவிற்கு சுதந்திரம் அளித்து இந்நாடு இந்தியா, பாகிஸ்தான் என இருநாடுகளாக்கப்பட்ட போது இந்த சமஸ்தானங்கள் இந்த இரு நாடுகளில் எதாவது ஒன்றுடன் இணைந்து விடலாமென அறிவிக்கப்பட்டது. நூற்றுக்கணக்கான சமஸ்தான மன்னர்கள் இந்தியாவுடன் இணைந்தது போல காஷ்மீர மன்னர் ஹரிசிங்கும் அப்போது இந்தியாவுடன் தம் சமஸ்தானத்தை இணைத்தார். ஆனால் பாகிஸ்தான் எவ்வித நியாயமும் இல்லாமல் காஷ்மீர சமஸ்தானத்தின் ஒரு பகுதியைத் தன் படைபலம் கொண்டு ஆக்கிரமித்துள்ளது. இன்று அப்பகுதிக்கு ஆக்கிரமிக்கப்பட்ட காஷ்மீர் என்றுதான் பெயர்.

இதுபோலவே சீனாவும் 1959 வாக்கில் திபெத்தை ஆக்கிரமித்தது. திபெத் சீனாவின் அண்டை நாடாக இருந் தாலும் பண்பாட்டில் அதனின்று வேறு பட்டு தனி அரசாங்கத்தையும் கொண்டிருந்தது. இந்த நாட்டின் பௌத்த மதத் தலைவராகவும் மன்னராகவும் தலாய்லாமா இருந்தார். 14வது தலாய்லாமாவான டென்ஜின் கயாட்ஸோ இந்தியாவில் அடைக்கலம் புகுந்தார். இவர் இந்தியாவில் இருந்து கொண்டு தம் அரசை நியமித்துள்ளார். இவரது தலைநகர் தர்மசாலா.

திபெத்தில் தலாய்லாமாவிற்கு



அடுத்தபடியான தலைவர் பஞ்சன்லாமா. சீனா இந்தப் பஞ்சன்லாமா பதவியைத் தன் பிடிப்பில் வைத்து கொண்டுவிட்டது. இது போலவே அந்நாட்டு மூன்றாவது தலைமைப் பதவியான கர்மபாவையும் தன் வசம் வைத்துக் கொள்ள இப்போது முயல்கிறது. தற்போதைய 17வது கர்மபா உக்யென்ட்ரின்லே தோர்ஜி என்பவர். இளம் வயதினரான இந்த கர்மபா சீனாவின் நெருக்குதலை சகியாமல் தன் சில தோழர்களுடன் சீனப் பிடியிலிருந்து தப்பி இந்தியாவிற்குள் வந்து ஜனவரி ஆரம்பத்தில் தர்மசாலாவை அடைத்திருக்கிறார்.

முன்பு எங்கள் பத்திரிகைகளில் ஒன்றாகப் பிரசுரமான 'ஹெரிடேஜ்' என்ற பத்திரிகைக்கு (1985-89) தலாய் லாமா அளித்த பேட்டியில் சீனா திபெத்திற்கு இழைத்த அநீதிகளைக் கூறி ''சீனாவின் புதிய கலாசாரப் புரட்சி எங்களது மத, கலாசார, நூல்களை எல்லாம் அழித்துவிட்டது. அதன் கை எழுத்துப் பிரதிகளை செருப்புகளுக்கு அடியில் ஒட்டவைத்தும், பொருள்களைப் பொட்டலம்கட்டவும் எருவாகக் குழிகளிலும் போட்டு விட்டார்கள். இது எங்களுக்கு எவ்வளவு பெரிய அவமானம்!'' என்றார். அப்போது பேட்டி கண்டவர் ''இப்போது அத்தகைய எண்ணங்கள் மாறியுள்ளனவா?'' என்று கேட்க அவரும் ''ஆம், மாறிக்கொண்டுதான் வருகிறது'' என்றார்.

திபெத்தில் மாற்றங்கள் ஏற்படலாம் என்றும் அதற்கு சுயாட்சி கிடைக்கும் என்றும் உலகம் எதிர்பார்க்கிறது.







மிக மிக உயரத்தில் இருப்பதால் திபெத் உலகின் கூரை எனப்படுகிறது. இங்குள்ள மிகக்குறைந்த உயரமான இடம் கடல் மட்டத்திற்கு மேல் 4000 மீட்டர். இங்கு விவசாயமும் ஆடுகளை வளர்ப்பதும் தான் தொழில்கள். கம்பிளி, கஸ்தூரி, கோதுமை, பார்லி, தங்கம் ஆகியவை வியாபாரத்திற்கான பொருள்கள். யாக் என்னும் பிராணியைத் தான் இப்பகுதி மக்கள் பெரிதும் நம்பி வாழ்கிறார்கள். திபெத்தியர்கள் எல்லோருமே அநேகமாக பௌத்தர்களே, அமைதியான வாழ்வுவாழ விரும்புபவர்கள் மிக எளிமையானவர்கள். கடும் உழைப்பாளிகள்.

# போட்டோ வாக்கியப் போட்டி

தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும்.



போட்டோவாக்கியப்
போட்டி
அம்புலிமாமா
வடபழனி
சென்னை-600 026.





போட்டிக்கான தலைப்புகளை தபால் கார்டில் எழுதி மார்ச் 25-ம் தேதிக்குள் மேலே உள்ள முகவரிக்கு வந்து சேருமாறு அனுப்ப வேண்டும். போட்டியில் வெற்றி பெற்ற தலைப்புகள் 2000 ஏப்ரல் மாத இதழில் வெளியிடப்படும்.
சிறந்த தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு

**வாழ்த்துக்கள்**



**ஜனவரி 2000** போட்டியில்
பரிசு பெற்றவர் :
B. **பிரியங்கா**
16-A, கல்லூரி சாலை,
ஆண்கள் கல்லூரி சாலை
கும்பகோணம் - 612 002.



**பரிசு பெற்ற தலைப்புகள்**

முதலாவது போட்டோ : அணிவகுத்தலில் பெருமை!
இரண்டாவது போட்டோ : அபிநயத்தில் இனிமை!

